







# ரூசோ

வெ. சாமிநாத சர்மா

# ரூஸோ




*வெ. சாமிநாத சர்மா*



கலைஞன் பதிப்பகம்
10 கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை – 600 017

# பதிப்புரை

புதுமையின் பிரதிநிதியாகத் தோன்றியவர் ரூசோ. மக்களுக்கு ஆளும் உரிமையுண்டு என்று முதன் முதலாக, பகிரங்கமாகச் சொன்னவர் இவர். ஓர் அறிஞன் கூறியுள்ள மாதிரி "ஏழை மக்களைத் தலை நிமிரச் செய்தவர்" இவர். சொத்துடையவர்கள், உயர்குலத்திலே பிறந்தவர்கள் ஆகிய இவர்கள் மட்டுமே அரசியல் நிர்வாகத்தில் பங்கெடுத்துக் கொள்ள உரிமையுடையவர்கள் என்ற பழைய கொள்கையைத் தகர்த்தெறிந்து உழைத்துப் பிழைக்கிறவர்களுக்கும் அரசியல் நிர்வாகத்தில் பங்குண்டு என்று குரல் கொடுத்தவர் இவர்.

இன்று பற்பல புதிய கொள்கைகள், உரிமை எண்ணங்கள் எல்லாம் உலகில் நிலவுகின்றன என்றால், இவற்றுக்கெல்லாம் அடிகோலிய மூலகர்த்தாக்கள் சிலர்தான். அந்தச் சிலருள் மிக முக்கியமான ஒருவர் ரூசோ.

சமுதாய வாழ்க்கை, அரசியல், கல்வி முதலிய பல துறைகளிலும் இந்த மேதையின் சிந்தனைகள் உலகப் புகழ்பெற்றவை. "மனிதன் சுதந்திரமாகப் பிறந்தான் ஆனால், எங்கும் அடிமைத் தளையுடனே காண்கிறான்" என்று குமுறிய ஒருவர் ரூசோ; அந்தத் தளைகளைப் பிய்த்தெறியப் போராடிய பெரியோர் அவர்.

உணர்ச்சிக் களஞ்சியமான அவரது வாழ்க்கைச்சரிதம் உருக்கமானது. அன்பர் சர்மாவின் தெளிந்த நடையிலே அதனைத் தமிழர்முன் சமர்ப்பிக்கிறோம்.

மேலே குறிப்பிட்ட இவையெல்லாம் திரு. சக்திகோவிந்தன் அவர்களின் முதற் பதிப்பில் வெளிவந்த செய்திகள், முற்போக்கு சிந்தனையும், முதல் தரமாக தமிழ் புத்தகங்களை வெளியிடவும் திரு. சக்தி கோவிந்தன் எடுத்துக்கொண்ட முயற்சிக்கு சான்றாகும்.

இதுபோல,

நாமக்கல் கவிஞரின் 'அவரும் அவனும்' நூலை திரு. சின்ன அண்ணாமலை அவர்களும், பாவேந்தர் பாரதிதாசன் 'பாண்டியன் பரிசு' நூலை திரு. முல்லை முத்தையா அவர்களும் அமைப்பு, முகப்பு எல்லாவற்றிலும் மிக நேர்த்தியாக கண்ணில் ஒற்றிக் கொள்ளும் வண்ணம் வெளியிட்ட பதிப்புத்துறையின் முன்னோடிகள் வழிகாட்டிகள். அவர்களை இந்த நேரத்தில் நினைத்தல் நமது கடமையாக கருதுகிறோம்.

**எம். நந்தன்**



# பிறநூல்கள்

1. சமுதாய ஒப்பந்தம்
2. நாடும் மொழியும்
3. மானிட ஜாதியின் சுதந்திரம்

# பொருளடக்கம்

# 1. தாயை இழந்த குழந்தை

"என்னுடைய துன்பங்களில் முதல் துன்பம், நான் பிறந்ததுதான்" என்று மனம் புழுங்கி எழுதுகிறான் ரூசோ ஓரிடத்தில். அவனுடைய வாழ்க்கை முழுவதும் இந்த ஒரு வாக்கியத்தில் அடங்கி விட்டது. ஆனால் இதன் ஒவ்வோர் எழுத்திலும் எவ்வளவு துயரம், எவ்வளவு மனவேதனை, எத்தனை பேருடைய சூழ்ச்சி, எத்தனை பேருடைய துரோகம் எல்லாம் அடங்கியிருக்கின்றன? எவன், ஆடம்பரத்தின் பகட்டுக்கும் அதிகாரத்தின் உறுமலுக்கும் மத்தியில் இருந்து கொண்டு ஏழைகளுக்காகத் தன் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தானோ, எவனுடைய எழுத்துக்கள் பிரெஞ்சுப் புரட்சி யென்று சொல்லப்படுகிற மகத்தான நெருப்பை மூட்டி விட்டதுவோ, எவனுடைய நூலான சமுதாய ஒப்பந்த*த்தைப் படிப்பது ஒரு கௌரவமென்று பதினெட்டாவது நூற்றாண்டு ஐரோப்பாவில் கருதப்பட்டதோ, அவன், அந்த ரூசோ,, உயிரோடிருந்த காலத்தில் பித்தனென்று பரிகசிக்கப் பட்டான்! ஓநாயைப் போல் வேட்டையாடப் பட்டான்! அதிகார சக்திகளும்

---

* **Social Contract** இந்த நூல் தமிழில் வெளியாகியிருக்கிறது.

ஏகபோக உரிமைகளும் அவனைப் படாத பாடு படுத்தி விட்டன! கூடவே ஜனங்களுடைய அறியாமையும் அவனை ஓரிடத்தில் நிலைத்து நிற்கவொட்டாதபடி விரட்டியடித்தது! என்ன வேடிக்கை பார்த்தீர்களா?

அறியாமைச் சேற்றிலே உழன்று கொண்டிருக்கிற ஜனங் களை மேலே தூக்கிவிட எவனொருவன் தன் கையைக் கொடுக்கிறானோ, அந்தக் கையையே, அவனையேகூட, அந்த அறியாமை இழுத்துக்கொண்டு விடுகிறது! ஆயினும் அவன் துணிந்து கையைக் கொடுக்கிறான். ஏன்? அவர்களோடு விழுந்து, உழன்று அப்படியாவது அந்த அறியாமைக் குட்டையைக் கொஞ்சம் கலக்கி விடுவோம் என்ற எண்ணந்தான். கலக்கம் ஏற்பட்டால் தெளிவு உண்டாகுமல்லவா? இப்படி வலியக் கை கொடுக்கிறவன் நிகழ்காலத்திலே இறந்து விடுகிறான்; ஆனால் எதிர்காலத்திலே வாழ்கிறான், நிகழ்காலம், அவனைத் தூற்றுகிறது; கல்லாலும் கழியாலும் அடிக்கிறது; குகைபோன்ற சிறையிலே கொண்டுபோய்த் தள்ளுகிறது; கடைசியில் தூக்கு மேடையிலேகூட ஏற்றி விடுகிறது. ஏற்றி விட்டுச் சும்மாயிருக்கிறதா? இல்லை, இல்லை, கைகொட்டி ஆரவாரம் செய்கிறது. அட நிகழ்காலமே! மகான்கள் விஷயத் தில், மகா கவிஞர்களின் விஷயத்தில் தீர்க்கதரிசிகளின் விஷயத்தில் நீ ஒரு துரோகி; பாபி; நன்றி கெட்டவன். ஆனால் அந்த மகான்களை, மகா கவிஞர்களை, தீர்க்கதரிசிகளை, எதிர்காலம், எவ்வளவு அன்புடன் வரவேற்கிறது! எத்தனை பேருடைய இருதயத்தில் அவர்களுக்கு இடம் ஏற்படுத்திக் கொடுக்கிறது! இந்தச் எதிர்கால சாந்தியை எதிர்பார்த்துத்தான், மகான்கள், நிகழ்காலத் துன்பங்களைப் புன்சிரிப்போடு ஏற்றுக் கொள்கிறார்கள்!

ஐரோப்பாவில் மிக அழகான இடம் ஸ்விட்சர்லாந்திலுள்ள ஜெனிவா நகரம். இது கடிகாரத் தொழிலுக்குப் பெயர்போனது; அப்படியே, அண்டினோரை ஆதரித்துக் காப்பாற்றும் நல்லியல்பு வாய்ந்தது. எப்படி என்றால், கி.பி. பதினாறாவது நூற்றாண்டில், ஐரோப்பாவில் கிறிஸ்துவ மதத்தின் புனிதத் தன்மையைக் காப்பாற்றவேண்டுமென்ற பெயரால் அநேக கொடுஞ்செயல்கள் நடைபெற்றன. இவற்றினின்று தப்ப முயன்றவர் பலர் இந்த ஜெனிவாவிலேதான் அடைக்கலம் புகுந்தனர். இப்படி ஐரோப்பாவின் பல பாகங்களிலிருந்தும் வந்து தஞ்சம் புகுந்தவர்கள், மொழியிலும், பரம்பரையிலும், பழக்க வழக்கங்களிலும் வித்தியாசப்பட்டவர்களாயிருந்த போதிலும், நாளாவட்டத்தில் ஒருநாட்டுப் பிரஜைகளாகி விட்டார்கள். கி.பி. பதினேழாவது நூற்றாண்டில் இவர்களிடத்தில் நிலவிய நாட்டுப்பற்றும், ஒற்றுமை உணர்ச்சியும் வியக்கத் த்க்கனவாயிருந்தன. இந்த இரண்டு தன்மைகளும் இவர்களிடத் தில் சுலபமாக அமைந்து விட்டதற்குக் காரணம், இவர்களுடைய பரம்பரைதான். அதாவது, மதவேற்றுமை காரணமாக வெளி நாடுகளிலிருந்து வந்த இவர்கள் அனைவரும், கண்ணியமான குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; நுண்ணறிவு உடையவர்கள். இவர்களுடைய வருகைக்குப் பின்னரே, ஜெனிவாவில் கடிகாரத் தொழில் சிறப்புற்றதென்று சொல்ல வேண்டும்.

இப்படி ஜெனிவாவிலே வந்து குடியேறினவர்களில் பலர் பிரெஞ்சுக்காரர்கள். இவர்களுடைய செல்வாக்குத்தான் ஸ்விட்சர்லாந்தின் பிற்காலத்திய சமுதாய வாழ்க்கையில் அதிகமாகப் பிரதிபலித்தது. 1712 - ஆம் ஆண்டில் ஜெனிவாவின் ஜனத்தொகை சுமார் 18,500. இவர்கள் அனைவரும் பிரெஞ்சு மொழியே பேசினார்கள் இவர்களுடைய கலைப்பண்பு

பிரெஞ்சு மயமாகவே இருந்தது பாதிரிமார்கள், பிரெஞ்சிலேயே உபதேசம் செய்தார்கள். கிறிஸ்துவ மதத்தின் கத்தோலிக்கப் பிரிவினருக்கு எப்படி ரோமாபுரி மையஸ்தானமாக இருந்ததோ அப்படியே புராடெஸ்டெண்ட் பிரிவினருக்கு ஜெனிவா மையஸ்தானமாயிருந்தது. இந்தப் பிரெஞ்சுக்காரர்களில் ரூசோ குடும்பத்தினரும் இருந்தனர். இவர்கள் 1529 - ஆம் ஆண்டிலேயே பாரிஸிலிருந்து ஜெனிவாவுக்கு வந்து குடியேறி விட்டார்கள். இவர்களுடைய வழித்தோன்றல்தான் நமது கதாநாயகனான ழேன் ழக்கே ரூசோ.[1]

இவருடைய தந்தையின் பெயர் ஐஸக் ரூசோ.[2] இந்த ஐஸக் ரூசோவோடு கூடப் பிறந்தவர்கள் மொத்தம் பதினைந்து பேர். ஆனால் இவர் ஒருவர்தான் ழேன் ழக்கேயைப் பெற்றுச் சிறப்புப் பெற்றார். இவர் - ஐஸக் ரூசோ - கடிகாரத் தொழிலைத் தனது ஜீவனோபாயமாகக் கொண்டிருந்தார். இவருக்குப் பொருட் செல்வம் அதிகம் இல்லை; ஆனால் கல்விச்செல்வம் நிரம்ப இருந்தது. வேலை நேரம் போக மற்ற நேரங்களில் ஓயாமல் புத்தகங்கள் படித்துக்கொண்டிருப்பார். இவர், சூஸன்னே பெர்னாட்ர்ட்[3] என்ற பெண்ணை விவாகம் செய்துகொண்டார். இவள் பாதிரி குடும்பத்திலே பிறந்தவள்; நல்ல பழக்க வழக்கங்களும் நல்ல சுபாவமும் உடையவள். இவள், திருமணத்தின் போது, பிறந்த வீட்டிலிருந்து கொஞ்சம் பணத் தையும் சில நல்ல புஸ்தகங்களையும் சீதனமாகப் பெற்றாள் தம் பதிகள் இருவரும் குடும்பத்தை இனிது நடத்தி இன்பம் நுகர்ந்து கொண்டிருந்தார்கள் இவர்களுக்கு இரண்டு ஆண் பிள்ளைகள்.

---

**1. Jean Jacques Rousseau (John James Rousseau)**
**2. Isaac Rousseau 3. Susanne Bernard**

மூத்தவன் பெயர் ப்ராங்காயிஸ் ரூசோ* இளையவன்தான் ழேன் ழக்கே ரூசோ, மூத்தவன் பிறந்த ஏழு ஆண்டுகள் கழித்து 1712 - ஆம் ஆண்டு ஜூன் மாதம் 28 - ஆம் தேதி இளையவன் பிறந்தான். இவன் பிறந்த பத்தாவது நாள் தாயார் இறந்து விட்டாள். பிறந்த காலத்திலிருந்தே இவனைத் துன்பம் தொடர்ந்து விட்டது!

ஐஸக் ரூசோவுக்கு திருமணமாகாத ஒரு சகோதரி இருந்தாள். இவள் சூஸன்னே பெர்னார்ட் இறந்த பிறகு, ஐஸக் ரூசோவின் குடும்ப நிர்வாகமனைத்தையும் ஏற்றுக்கொண்டாள். சிறுவர்கள் இருவரும் இவளுடைய பராமரிப்பிலேயே வளர்ந்தார்கள். இளையவனைப் பராமரித்துக் காப்பாற்றுவ தென்பது சிறிது கடினமாகவே இருந்தது. பிறந்தவுடனேயே தாயாரைப் பறிகொடுத்து விட்டவனல்லவா? இருக்குமோ போகுமோ என்ற நிலையிலேதான் இவன் - ழேன் ழக்கே ரூசோ - பிறந்த சிறிது காலம்வரை இருந்தான். ஆனால் அத்தை யினுடைய அன்பான பராமரிப்பு இவனைக் காப்பாற்றியது; தாயாரில்லாத குறையை உணராமலே வளர்ந்தான். இந்த அத்தை, பிற்காலத்தில் அதிக கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தபோது தன்னால் ஒன்றும் செய்ய முடியவில்லையே என்று இவன், தன் சுய சரிதத்தில் வாய்விட்டு அலறியிருக்கிறான்.

"என் அன்புள்ள அத்தையே, என்னைச் சாகவிடாமல் காப்பாற்றியதற்காக உனக்கு என்றென்றும் நன்றி செலுத்து கிறேன். ஆனால், எனது வாழ்க்கையின் உதய காலத்தில் நீ என்மீது எவ்வளவு அன்பை யும் ஆதரவையும் சொரிந்தாயோ, அதே அன்பையும் ஆதரவையும் உனது வாழ்க்கையின் இறுதிக்

* **Francois Rousseau**

காலத்தில் உன் விஷயத்தில் செலுத்த முடியவில்லையே என்று நான் வருந்துகிறேன்.'' - இப்படி வருத்தப்பட்ட போதிலும் இவன், தன் அத்தைக்கு அவளுடைய கடைசிக் காலத்தில் ஒரு சிறு தொகையைத் தவறாமல் அனுப்பிக் கொண்டுதான் வந்தான்.

இப்படி அத்தையினுடைய பராமரிப்பில் சிறுவர்கள் இருவரும் ஒரே மாதிரியாக வளர்ந்துவந்த போதிலும், மூத்தவனான ப்ராங்காயிஸ் மட்டும், சிறு வயதிலிருந்தே குடும்பத்திற்குப் புறம்பானவனாகவே இருந்தான். யார் சொன்ன வார்த்தையையும் கேட்கமாட்டான். வீட்டிலே தங்காமல் வெளியில் சுற்றுவது அவன் சுபாவமாகி விட்டது. இதனால் இரு சகோதரர்களும் நெருங்கிப் பழகக்கூடிய சந்தர்ப்பங்கள் கூட ஏற்படவில்லை. ஆனாலும் இளையவன், மூத்தவனிடத்தில் அதிக விசுவாசம் வைத்திருந்தான். தந்தையோ அத்தையோ அவனைக் கடிந்துகொண்டால், அவனுக்காக அவர்களிடத்தில் பரிந்து பேசுவான். ஒரு நாள், தந்தை, ப்ராங்காயிஸை நன்றாக அடிப்பதை இவன் பார்த்து உடனே, தன் சகோதரனைக் கட்டித் தழுவிக்கொண்டான். அவன்மீது விழ வேண்டிய அடிகள் இவன் மீது விழுந்தன. அடி தாங்க மாட்டாமல் கண்ணீர் விட்டுக் கதறினானே தவிர, அண்ணனை விட்டு அவன் நகரவேயில்லை. பார்த்தார் தந்தை, அடிப்பதை நிறுத்திக்கொண்டார். சிறியவனுடைய அன்புக்காகப் பெரியவனுடைய குற்றத்தை மன்னித்து விட்டார் ஆனாலும் பெரியவனுடைய துர்நடத்தைகள் வரவர அதிகமாயின. கடைசியில் ஒருநாள், வீட்டில் உள்ள யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் எங்கேயோ ஓடிப்போய் விட்டான். பிறகு அவனைப் பற்றி ஒரு செய்தியும் தெரியவில்லை.

மூத்த பையன் இப்படியாகி விட்டதனால் இளைய பையனிடத்தில் அத்தையும் தந்தையும் அதிக நம்பிக்கை வைக்கலானார்கள். அத்தையானவள், ழேன் ழக்கேயினிடத்தில் வைத்த பரம விசுவாசத்தினாலும், தாயாரில்லாத குறை தெரியக்கூடாதென்னும் எண்ணத்தினாலும், இவனை எங்கும் வெளியே போக விடாமலும், எவ்வித துணிச்சலான காரியத்தைச் செய்யவிடாமலும், அதிகப் பாதுகாப்புடன் வளர்த்து வந்தாள். இதனால் ழேன் ழக்கேக்கு எதையும் பார்த்து மனமிளகிப் போகக்கூடிய தன்மையும், கஷ்டத்தை உறுதியுடன் சகித்துக்கொள்ள முடியாத ஒரு மென்மைச் சுபாவமும் உண்டாகி விட்டன. ஆனால் இவனுடைய தந்தையான ஐஸக் ரூசோ இவனை வேறு விதமாக வளர்த்து வந்தார்.

ழேன் ழக்கே ரூசோ (-இனி இவனை வெறும் ரூசோ என்றே அழைப்போம்) எந்த விதமான பள்ளிக்கூடத்திற்கும் ஒழுங்காகச் சென்றவனில்லை. ஆனால் ஏழாவது வயதை எட்டிப் பார்ப்பதற்கு முன்னரே எழுதவும் படிக்கவும் தெரிந்து கொண்டு விட்டான். எப்படித் தெரிந்துகொண்டானென்பது யாருக்கும் தெரியவில்லை. தனக்கே இது தெரியாதென்று இவன் கூறுகிறான். பள்ளிக்கூடத்திற்குப் போகாமலே தன் மகன் படிப்பில் ஆர்வம் காட்டி வருவதைக் கண்ட ஐஸக்குக்குப் பரம சந்தோஷம். மகனைத் தனக்குச் சமதையாகவே நடத்தி வந்தார். தந்தையும் மகனும் சேர்ந்துகொண்டு அநேக நூல்களைப் படிப்பார்கள். இரண்டு பேருக்கும் பொழுது போவதே தெரியாது.. சில நாட்களில் இரவு முழுவதும் படித்துக்கொண்டிருப்பார்கள். விடியற்காலை, பட்சிகளின் சல சல சப்தத்தைக் கேட்ட பிறகே விடிகிற தருணம் என்று அறிந்து படுக்கப்போவார்கள். ரோம் சரித்திரம், கிரேக்க இதிகாசம் இவைகளை எல்லாம் தந்தை

உற்சாகத்தோடு படித்துக்காட்ட, மகன் கவனத்தோடு கேட்பான். சில சமயங்களில் மகனே உரத்துப் படிப்பான். கேட்டு மகிழ்வார் தந்தை. அந்தக் கிரேக்க - ரோம் சரித்திரங்களில் வரும் வீரர் களைப் போல் தானும் ஒருவனாக வேண்டுமென்ற எண்ணம் ரூசோவுக்கு அந்தச் சிறு வயதிலிருந்தே உதித்தது. இதற்கு அநுசரணையாகவே ஐஸக்கும் இவனுக்குத் தேசபக்தி உணர்ச்சியை ஊட்டி வந்தார். பிற்காலத்தில் ரூசோ, தான் பிறந்து வளர்ந்த ஜெனிவாவைப் பற்றிப் பெருமையாகப் பேசிக் கொண்டதற்கெல்லாம் காரணம், இந்தச் சிறு வயதில் தகப்பன் போதித்த போதனைகள்தான்.

ரூசோ, தன் பெயரை எழுதுகிறபோது 'ழேன் ழக்கே ரூசோ ஜெனிவாவின் பிரஜை' என்றுதான் எழுதுவான். "நான் சுதந்திர ராஜ்யத்தின் பிரஜையாகப் பிறந்தவன்; அந்த ராஜ்ய அமைப்பிலே ஓர் அங்கத்தினன்" என்றும், "பற்பல அரசாங்க அமைப்புகளைப்பற்றி நான் ஆராய்ச்சி செய்யச் செய்ய, என் தாய்நாட்டை நான் ஏன் இன்னும் அதிகமாக நேசிக்க வேண்டு மென்பதற்கான காரணங்களும் அதிகமாகிக் கொண்டு போகின்றன" என்றும், தனது சமுதாய ஒப்பந்தம் என்னும் நூலில் கூறுகிற வாக்கியங்களில் இவனுடைய நாட்டுப்பற்று ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றது. இவன், மேற்படி நூலில், ஜெனிவாவின் அரசியல் அமைப்பையே நல்ல அரசாங்கங்களுக்கு உதாரண மாக எடுத்துக் காட்டுகிறான்.

அவ்வளவு தூரம் அவன் ஜெனிவாவின்மீது பற்றுக் கொண்டிருந்தான் ஆனால் அந்த ஜெனிவா, இவனுக்கு என்ன செய்தது? இவனுடைய நூல்களைப் பகிரங்கமாகத் தீயிட்டுக் கொளுத்தியது! இவனை நாடு கடத்தியது! நன்றிகெட்ட தன்மை என்பது ஒன்றிருக்குமானால் அது இதுதான். ஆனால் எல்லா

அறிவு ஜீவிகளுக்கும் இதே மாதிரி கதி ஏற்பட்டிருக்கிற தென்பதைக் கொண்டு நாம் ஆறுதல் பெற வேண்டியிருக்கிறது. இத்தாலியிலே பிறந்த மகாகவி தாந்தே[1]க்கு இத்தாலியிலே இடமில்லை! ஜெர்மனியிலே பிறந்த கார்ல் மார்க்ஸுக்கு[2] ஜெர்மனியிலே இடமில்லை! ஜெனிவாவிலே பிறந்த ரூசோவுக்கு ஜெனிவாவிலே இடமில்லை!

மனிதர்களுடைய எண்ணங்களுக்கும், எழுத்துரிமைக்கும், பொருளுரிமைக்கும் போராடுகிற எல்லாத் தலைவர்களுக்கும், சமுதாயத்தின்மீது படிந்துள்ள அழுக்குகளைத் துடைக்க முன் வருகிற எல்லோருக்கும் இதே கதிதான். ஜான் ஹஸ்[3] என்ன, ஸவோன ரோலா[4] என்ன, ஜியார்டானோ ப்ரூனோ[5] என்ன, கலிலியோ[6] என்ன, இப்படி நூற்றுக்கணக்கானோர் எவ்வளவோ கஷ்டப்பட்டிருக்கிறார்கள். ஆயினும் கடமையை முகமலர்ச்சி யுடன் செய்து கொண்டு போயிருக்கிறார்கள், உள்ளத்தில் தோன்றியதை வெள்ளையாகச் சொல்லியுமிருக்கிறார்கள்.

---

1. **Dante 1265 - 1321.** தெய்விக நாடகம் என்ற மகா காவியத்தின் ஆசிரியன்.

2. **Karl Marx 1818 - 1883.** சமதர்மத்தை ஒழுங்கான ஒரு தத்துவமாக வகுத்தவன். காபிடல் என்ற நூலின் பேராசிரியன். இவனுடைய வாழ்க்கை வரலாறு தமிழில் வெளியாகியிருக்கிறது.

3. **John Huss 1369 - 1415.** பொஹிமியா தேசத்து மதச் சீர்திருத்தவாதி. உயிரோடு கொளுத்தப்பட்டான்.

4. **Savanarola 1452 - 1498.** இத்தாலியிலிருந்த பெரிய மதச் சீர்திருத்தவாதி. தன்னுடைய மதக்கொள்கைகளுக்காக மலர்ந்த முகத்துடன் தூக்குமேடையில் ஏறியவர்.

5. **Giardano Bruno 1550 - 1600.** இத்தாலிய தத்துவஞானி. அரிஸ்டாட்லின் கொள்கைகள் சிலவற்றை மறுத்து அதுகாரணமாக அநேக கஷ்டங்கள் பட்டு கடைசியில் உயிரோடு கொளுத்தப்பட்டார்.

6. **Galileo 1564 - 1642.** பிரபல வான சாஸ்திரி. சூரியனைச் சுற்றி பூமி முதலிய கிரகங்கள் வலம் வருகின்றன என்ற கொள்கையை வலியுறுத்தியவர். இதற்காக அநேக துன்பங்களை அநுபவித்தார்.



## 2. பிறருக்காகப் பரிந்து பேசுதல்

ருசோவுக்குப் பத்து வயது ஆயிற்று. இவனுடைய வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அதாவது இவன் தந்தையான ஐஸக் சில அதிகாரிகளோடு சண்டை போட்டு விட்டதன் காரணமாக ஜெனிவாவை விட்டு வேற்றூருக்குப் போய்விட்டார். அப்படிப் போவதற்கு முன்னர், குடும்பத்தைக் கலைத்து விட்டும், ருசோவை, அவனது அம்மான் பெர்னார்ட்[1] என்பவனிடத்தில் ஒப்புவித்துவிட்டும் சென்றார்.

பெர்னார்ட், ராணுவத்தில் ஓர் இஞ்சினீயர். ஜெனிவா விலேயே வசித்துக்கொண்டிருந்தான். அவனுக்கு ஒரு மகனுண்டு. அவனும், ருசோவும் இணைபிரியாத நண்பர்களாகி விட்டார்கள். இருவரையும் படிப்பிக்க பெர்னார்ட் ஏற்பாடு செய்தான். ஜெனிவாவுக்கு நான்குமைல் தூரத்தில் போஸ்ஸே[2] என்ற ஓர் ஊர் உண்டு. இயற்கை அழகு செறிந்த இடம். இங்கே வசித்துக் கொண்டிருந்த லாம்பெரிஸியர்[3] என்ற ஒரு புராடெஸ்டெண்ட் பாதிரியினிடத்தில் கல்வியறிவு பெற,

---

1. Bernard  2. Bossey

3. Lambercier

இருசிறுவர்களும் அனுப்பப்பட்டார்கள். இருவரும் லாம் பெர்ஸியர் குடும்பத்துடனேயே தங்கியிருக்க வேண்டுமென்பது ஏற்பாடு.

இந்த ஏற்பாட்டின் பேரில் இருவரும் மேற்படி பாதிரியினி டத்தில் சுமார் இரண்டு வருஷகாலம் கல்வி பயின்றார்கள். என்ன மாதிரியான கல்வி? "லத்தீன் மொழியையும், அதைத் தொடர்ந்தாற் போல் சில பினாத்தல்களையும் சேர்த்து கல்வி என்ற பெயரால் எங்களுக்குப் போதிக்கப்பட்டது" என்று ரூசோவே தான் கல்வி கற்ற விந்தையைப் பற்றிக் கூறுகிறான். ஆனால் மேற்படி இரண்டு வருட காலத்தையும், தான் இன்பகர மாகக் கழித்ததாகவும், தனது வாழ்நாளிலேயே இந்த இரண்டு வருடந்தான் சந்தோஷமான பாகமென்றும் இவன் சொல்கிறான். இதற்கு முதல் காரணம் கிராம வாழ்க்கை; மற்றொரு காரணம், லாம்பெர்ஸியர் குடும்பத்தினர் இவன் மீது பாசமாக நடந்து கொண்டது. அவர்கள் இவனை மாணாக்கனாக மட்டும் நடத்த வில்லை; குடும்பத்திலே ஒருவனாகக் கருதி நடத்திவந்தார்கள்.

இப்படியிருக்கையில், ரூசோவினுடைய பசுமனத்தை அசைத்துக்கொடுக்கக்கூடிய ஒரு சம்பவம் நடைபெற்றது. ஒருநாள், பாதிரி மனைவியின் தலைவாரிக் கொள்ளும் சீப்பு உடைந்துவிட்டது ரூசோதான் இதை உடைத்துவிட்டான் என்று அந்த அம்மாள் குற்றஞ்சாட்டினாள். நல்ல அடி கொடுத்தான் பாதிரி. இந்த அடி, ரூசோவின் உள்ளத்தில் அடையாளம் வைத்து விட்டது. தான் அடிபட்டதற்காக அவன் வருந்தவில்லை; தான் அநியாயமாகக் குற்றஞ் சாட்டப்பட்டதற்காகவே வருந்தினான்.

'நல்ல மனிதர்கள்கூட, சில சமயங்களில் எவ்வளவு கொடூரமாக நடந்துகொள்கிறார்கள்? மனிதனிடத்தில் தெய்வத்

தன்மை குடிகொண்டிருக்கிறதென்பதெல்லாம் வெறும் ஏமாற்றம். பிரதி தினமும், சில நிமிஷ நேரமாவது அவன் மிருகமாகிறான்; அல்லது ஜடவஸ்துவாகிறான். அவன் தெய்வத்தன்மையோடு கூடியிருப்பதெல்லாம் எப்பொழுதோதான்; ஏகதேசமாகத்தான்.' -ரூசோவின் பசுமனம் இப்படி பலவகையாகச் சிந்திக்கத் தொடங்கியது. சந்தோஷம் என்பது இவனைவிட்டு அகன்று விட்டது. "இந்தக் காலத்திலிருந்து என் குழந்தைப் பருவத்தின் அமைதி என்னைவிட்டுப் போய் விட்டது. கலப்பற்ற சந்தோஷம் என்று சொல்கிறார்களே, அதை அந்தக் காலத்திலிருந்தே நான் அநுபவித்ததே கிடையாது. அந்த அமைதி, அந்தச் சந்தோஷம், இன்னும் சிறிது காலமேனும் என்னைப் பற்றிக் கொண்டிருந் திருக்கக்கூடாதா என்று இப்பொழுது ஏங்குகிறேன். பாதிரி வீட்டில் நடந்த சம்பவத்திற்குப் பிறகு, நானும் பெர்னார்ட்டின் மகனும், சில மாதகாலம் பாதிரியின் வீட்டில் தங்கியிருந்தோம் என்பது வாஸ்தவம். பூமியில் முதன் முதலாகச் சிருஷ்டிக்கப் பட்ட ஆதாம் என்ற மனிதன் எப்படி பூலோகத்திலே இருந்தும் பூலோக சுகத்தை அநுபவிக்க முடியாமல் இருந்தானோ* அதைப் போல்தான் நாங்களும் அந்த வீட்டில் இருந்தோம். ஆனால் வீட்டின்பத்தை அநுபவிக்கவில்லை. வெளிப் பார்வைக்கு எல்லாம் பழைய மாதிரியே நடந்து வந்தன. ஆனால்

---

* *"தேவனாகிய கர்த்தர் மனுஷனை நோக்கி: நீ தோட்டத்திலுள்ள சகல விருட்சத்தின் கனியையும் புசிக்கவே புசிக்கலாம். ஆனாலும் நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியைப் புசிக்க வேண்டாம். அதை நீ புசிக்கும் நாளில் சாகவே சாவாய் என்று கட்டளையிட்டார்" என்ற வாசகத்தையும் "நீ (ஆதாம்) உயிரோடிருக்கும் நாளெல்லாம் வருத்தத்தோடே அதன் பலனைப் புசிப்பாய்" என்ற வாசகத்தையும் நோக்குக.*

ஆதியாகமம் 2,3 அதிகாரம்

வீட்டிலுள்ளவர்கள் எல்லோரும் புதியவர்களாகவே எங்களுக்குத் தென்பட்டார்கள். அவர்களுக்கும் எங்களுக்கும் இடையில் பரஸ்பர இணக்கம், நெருக்கம், மன ஒற்றுமை முதலியன ஒன்றுமே இல்லை. எங்களுடைய இருதய உணர்ச்சி களை வாசித்தறியக்கூடிய தெய்வங்களாக லாம்பெர்ஸியர் தம்பதிகளை நாங்கள் இதுகாறும் போற்றி வந்தோம் - இனி? இந்தக் காலத்திலிருந்து விஷமஞ் செய்வதற்கு நாங்கள் வெட்கப்படவில்லை. ஆனால் பழி சுமத்திவிடப்போகிறார்களே என்ற அச்சம் மட்டும் எங்களுக்கு அதிகமாகிக் கொண்டு வந்தது. ஒளிவுமறைவாகக் காரியங்களைச் செய்யத் தொடங்கி னோம்; பொய் சொல்லத் துணிந்தோம்; கட்டுக்கடங்காதவர் களானோம். எங்களுடைய விளையாட்டுகளிலே எங்களுக் கிருந்த உற்சாகம் போய் விட்டது. எங்களுக்கு அமிருதபானமா யிருந்த இயற்கையழகு, அது முதல் கசப்பாகப் போய்விட்டது. அந்த இயற்கை, எங்களை உறுத்துப் பார்ப்பதாகத் தோன்றியது. முன்னர் தோட்டம் பயிரிடுவோம்; செடி வளர்ப்போம்; மலர் பறிப்போம். எல்லாம் இப்பொழுது நின்று விட்டன பூமியைக் கீறினாலும், பூமியிலிருந்து ஒரு முளை கிளம்பினாலும் முன்னர் எங்களுக்கு எவ்வளவு சந்தோஷமாயிருந்தது! இப்பொழுது எல்லாம் மண்மயமாகவே தென்பட்டது. நாங்கள் எங்களுடைய வாழ்க்கையைச் சுவைக்க முடியவில்லை. பிறருக்கும் நாங்கள் சுவையாக இல்லை... எங்களை பெர்னார்ட் அம்மான், பாதிரி குடும்பத்திலிருந்து அழைத்துக் கொண்டு போய்விட்டார். இந்தப் பிரிவுக்கு நாங்கள் வருந்தவே யில்லை."

சிறிய விஷயந்தான் ஆனால், இது ரூசோவின் மனத்தை எவ்வளவு புண்ணாக்கிவிட்டது? சாதாரணமாகவே குடும்பங் களில், பெற்றோர்கள், தங்கள் குழந்தைகளை அலட்சியப்படுத்தி,

அநேக காரியங்களைச் செய்கிறார்கள். அவை, அந்தக் குழந்தைகளின் இருதயத்தில் எந்தவிதமான முத்திரை இடுகின்றன என்பதைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதே யில்லை. அநேக சந்தர்ப்பங்களில் ஒரு சிறிய சம்பவம், பிற்காலத்தில் நமது ஞாபகத்திற்குக்கூட வராத அவ்வளவு சிறிய சம்பவம், ஒரு குழந்தையினுடைய எதிர்கால வாழ்க்கையையே அடியோடு மாற்றிவிடும் என்பதைப் பெற்றோர்கள் தெரிந்து கொண்டிருந்தால், குடும்பங்களில் சர்வசாதாரணமாக ஏற்படுகிற அநேக துயரங்களுக்கு வழியே இராது. குடும்பங்களில் துயரமில்லாமலிருந்தால், தேசமும் துயரமில்லாமல் இருக்கு மல்லவா? இதனால் குழந்தைகளை வளர்ப்பதென்பது எவ்வளவு பொறுப்புடைய காரியம் என்பது தெரியவரும்.

பாதிரி குடும்பத்தை விட்டகன்ற ரூசோவும், இவனுடைய சகபாடியும், பெர்னார்ட் அம்மான் வீட்டில் சிறிது காலம் வசித்துக் கொண்டிருந்தார்கள். ரூசோ இந்தக் காலத்தை, வர்ணக் காகிதங்களினால் அநேக உருவங்களைச் செய்வது, காற்றாடி விடுவது, படங்கள் ஒட்டுவது முதலிய விளையாட்டுகளில் கழித்தான். இவனும், சகபாடியான அம்மான் மகனும், வீதியில் மற்றப் பிள்ளைகளுடன் சேர்ந்து விளையாடுவார்கள். சில பிள்ளைகள், அம்மான் பிள்ளையைப் பரிகசித்து அவனைப் பல தொந்தரவுகளுக்குட்படுத்துவார்கள். அவர்களோடு சண்டைக்குப் போவான் அவன் அடிபடுவான். அவனுக்குப் பரிந்துகொண்டு ரூசோ செல்வான். இவனுக்கும் அதே கதிதான். பிறருக்காகப் பரிந்து பேசுவது, பிறர் கஷ்டங்களைப் போக்கு வதற்காகத் தன்னாலானவரை முயல்வது முதலிய சுபாவங்கள், இந்தச் சிறு வயதிலிருந்தே ரூசோவுக்கு அமைந்திருந்தன. இந்தக் காலத்தில் நிகழ்ந்த ஒரு சிறு சம்பவத்தை இங்கு எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

ரூசோவினுடைய அத்தை புருஷன் ஒருவன், ஜெனிவாவுக்கு அருகாமையில் சீட்டித் துணிகள் தயார் பண்ணும் ஒரு சிறிய தொழிற்சாலையை நடத்தி வந்தான். ஒருநாள், இந்தத் தொழிற்சாலைக்கு ரூசோவும், அத்தை புருஷனுடைய மகனான பேஸி* என்பவனும் போனார்கள். போய், தொழிற்சாலை முழுவதையும் சுற்றிப் பார்த்தார்கள். ஒரு இயந்திரத்தின் உருளை தகதகவென்று பிரகாசித்துக் கொண்டிருந்தது. அதனைத் தடவிப் பார்த்தான் ரூசோ. அந்தச் சமயத்தில் கூட இருந்த பேஸி, இன்னது செய்தால் இன்னது விளையும் என்று தெரியாமல் அந்த இயந்திரத்தை முடுக்கிவிட்டான். உருளை சுழல ஆரம்பித்தது. ஓவென்று அலறினான் ரூசோ. பேஸி யந்திரத்தை நிறுத்திவிட்டு அருகில் ஓடிவந்து பார்த்தான். ரூசோவின் இரண்டு விரல்கள் நசுங்கிக் கிடந்தன. ரத்தம் பீறிட்டு வந்து கொண்டிருந்தது. பேஸி பயந்துவிட்டான்; யாரிடமும் சொல்ல வேண்டாமென்று ரூசோவைக் கேட்டுக் கொண்டான்; சொன்னால் தனக்குத் தண்டனை கிடைக்குமென்பதையும் தெரிவித்துக் கொண்டான். அந்த க்ஷணத்திலிருந்து ரூசோ, தன் நோயை வாய்விட்டுச் சொல்லவில்லை. எப்படியோ பொறுமையாக அடக்கிக்கொண்டு விட்டான். மூன்று வாரம் படுக்கையிலேயே கிடந்தான். சுமார் இரண்டு மாத காலம், தன் கையை உபயோகப்படுத்த முடியாதவனாயிருந்தான். ஆனாலும், தன் அத்தை புருஷனுடைய தொழிற்சாலையில் தன் விரல்களுக்கு இந்தக்கதி ஏற்பட்டதென்று யாருக்கும் சொல்லவில்லை. யாராவது கேட்டால், ஒரு கல் விழுந்து இப்படி ஆகிவிட்டதென்றுதான் சொல்லிவந்தான். பிறருடைய நலத்திற்காகத் தன்னலத்தைப் பொருட்படுத்தாதிருப்பதிலே எவ்வளவு சிரத்தை இந்தச் சிறு வயதிலேயே!

---

* **Fasy**

எவ்வித வேலையுமில்லாமல் ரூசோவை எவ்வளவு காலம் வீட்டிலேயே வைத்துக்கொண்டிருப்பது? பெர்னார்ட் அம்மான், சில இடங்களில் பிரயத்தனப்பட்டுக் கடைசியில் இவனை, கோர்ட் சம்பந்தமான தஸ்தாவேஜுகளை எழுதிக்கொடுத்துப் பிழைக்கும் எம். மாஸ்ஸரான்[1] என்பவனிடம் கையாளாகக் கொண்டு சேர்ப்பித்தான். ரூசோ சில நாட்கள்தான் இங்கே இருந்தான். இவனுக்கும் மேற்படி மாஸ்ஸரானுக்கும் பொருந்த வில்லை. முதலாவது இவன் – ரூசோ அந்த உத்தி யோகத்தையே வெறுத்தான். அவனோ – அந்த எஜமானனோ இவனை ஓர் 'உதவாக்கரை' என்று கருதினான். இவனால் சுறுசுறுப்பாக வேலை பார்க்க முடியவில்லை என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தான். கடைசியில் ஒரு நாள் வேலையினின்றும் விலக்கி விட்டான்.

பின்னர், சித்திரம் செதுக்குந் தொழிலையாவது இவன் கற்றுப் பிழைக்கட்டுமென்று சொல்லி பெர்னார்ட் அம்மான், இவனை செதுக்குத் தொழில் நிபுணனான ஆபெல் டு கோமன்[2] என்பவனிடம் ஐந்து வருஷ ஒப்பந்தத்தின்பேரில் கொண்டு போய் அமர்த்தினான் . அதாவது டுகோமனிடம் ஐந்து வருடம் வேலை கற்றுக்கொள்ள வேண்டுமென்பதும், இந்த ஐந்து வருட காலமும் அவனுடன் கூடவே இருந்து வரவேண்டுமென்பதும், இதற்காக அவனுக்கு ஒரு தொகை செலுத்திவிட வேண்டு மென்பதும் ஏற்பாடு. ஆனால் சுயேச்சையாக நடந்துகொள்ளும் சுபாவமுடைய ரூசோவுக்கு டுகோமனை பிடிக்கவில்லை. டுகோமன் எஜமான தோரணையில் ரூசோவைக் கடுமையாக நடத்தினான். இரண்டு வருட காலம் எல்லாவற்றையும் சகித்துக்

1. M. Masseron 2. Abel Ducommon

கொண்டு வேலை பழகிவந்தான் ரூசோ. அதற்குமேல், டுகோமனுடைய கொடூரத்தை இவனால் பொறுக்க முடிய வில்லை. எப்படியாவது வெளியேறி விடுவதென்று தீர்மானித்தான்.

ஜெனிவாவைச் சுற்றி உயர்ந்த மதிற்சுவர்கள் உண்டு. நான்கு திக்கிலும் நான்கு நுழை வாயில்கள். நகரத்திற்குள்ளே வருவோரும், வெளியே போவோரும் இந்த நுழைவாயில்களின் மூலமாகத்தான் செல்லவேண்டும். இரவுக் காலங்களில் இவைகளை மூடிவிடுவார்கள். குறிப்பிட்ட ஒரு நேரத்திற்குள் உள்ளே வந்துவிட்டால் சரி, இல்லாவிட்டால் இரவு முழுவதும் நகரத்திற்கு வெளியே கிடக்க வேண்டியதுதான்.

ரூசோ, டுகோமனிடம் வேலை பழகிக் கொண்டிருந்த காலத்தில் மாலை நேரங்களில் ஓய்வு கிடைக்கிறபோது, நகரத்திற்கு வெளியே உலாவச் செல்வான். இப்படிச் சென்று கொண்டிருந்த காலத்தில் இரண்டு முறை, குறித்த நேரத்தில் நகரத்திற்குள் வரமுடியாமல் நுழைவாயிலுக்கு வெளியே தங்கிவிட்டான். மறுநாள் காலைதான் வீடுவந்து சேரவேண்டிய நிலைமை ஏற்பட்டது இரண்டு முறையும், டுகோமன் இவனை நன்றாக அடித்துவிட்டான். மூன்றாவது முறையாக ஒரு சமயம் இவன் வெளியே சென்று திரும்பிவருவதற்கு முன்னரேயே நுழைவாயிற் கதவுகள் மூடிக்கொண்டு விட்டன. மூடிக்கொள்கிற சப்தமும் இவன் காதில் விழுந்தது. “இனி நீ நாடோடியாகத்தான் வாழ வேண்டும்” என்று இவனுக்குச் சொல்வது போலிருந்தது அந்தச் சப்தம். அவ்வளவுதான். முந்திய தடவைகளைப்போல் இரவு அங்கேயே தங்கி மறுநாள் காலையில் சென்றால் டுகோமன், முன்னைவிடக் கடுமையான தண்டனை விதிப்பான் என்பது இவனுக்குத் தெரியும் எனவே, அவன் முகத்தில்

மறுபடியும் விழிப்பதில்லை என்று தீர்மானித்தான். அதாவது நுழைவாயிலைக் கடந்து நகரத்திற்குள் பிரவேசிப்பதில்லை என்று உறுதிகொண்டான். மறுநாள் காலை நண்பர்களின் மூலம் தான் கொண்டுள்ள தீர்மானத்தைப் பற்றித் தன் அம்மான் மகனுக்குச் சொல்லியனுப்பினான். அவனும், சில தின்பண்டங் களையும், துணிமணிகளையும், ஒரு சிறிய கத்தியையும் எடுத்துக் கொண்டு வந்தான். இருவரும் கட்டித் தழுவிக் கொண்டார்கள்; கண்ணீர் விட்டார்கள். ரூசோ விடைபெற்றுக் கொண்டான் புறப்பட்டு விட்டான். எங்கே? அவனுக்கே தெரியாது. உடம்பை மறைக்கும் சிறிய சொக்காய்; முழங்கால் அளவு வரும் கால் சராய்; அதன் கீழ் இறுகக்கட்டின பட்டி; காலில் கெட்டியான பூட்ஸ்; இடுப்பிலே அம்மான் மகன் கொடுத்த சிறு கத்தி. இந்தக் கோலத்துடன் யாருக்கும் தெரியாத இந்தப் பதினாறு வயது இளைஞன் முன்பின் அறியாத உலகத்தை நோக்கி நடந்தான். அன்று திங்கட்கிழமை. 1728 – ஆம் வருஷம் மார்ச்சு மாதம் 15 – ஆம் தேதி.



# 3. மத மாற்றமும் ஊர் சுற்றுதலும்

சிலநாட்கள் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தான் ரூசோ. கடைசியில் இத்தாலியைச் சேர்ந்த சேவாய் என்ற ஊரை அடைந்தான். அங்கு மத மாற்றம் வெகு மும்முரமாக நடைபெற்று வந்தது. அதாவது கிறிஸ்துவ மதத்தில் புராடெஸ்டெண்ட் பிரிவைச் சேர்ந்த பலர், ரோமன் கத்தோலிக்கப் பிரிவில் சேர்க்கப்பட்டனர். ரூசோ, புராடெஸ்டெண்ட் பிரிவைச் சேர்ந்தவனல்லவா? இவன், சேவாய் சென்றதும் ஒரு கத்தோலிக்கப் பாதிரியின் தயவில் இருக்கவேண்டியதாயிற்று. அவர், இவனை நல்வழிப்படுத்தத் திருவுளங் கொண்டார். இனிய மொழிகள் பல புகன்றார். பாவத்தினின்று விலக வேண்டுமனால் புராடெஸ்டெண்ட் பிரிவினின்று விலகி, கத்தோலிக்கப் பிரிவைத் தழுவ வேண்டுமென்று போதனை செய்தார். நல்ல சாப்பாடு போட்டு வயிற்றுப் பசியைத் தீர்ப்பது எதுவாயிருந்தாலும் அதனை நமது சொந்தமாக்கிக் கொள்ள வேண்டியதுதானே? ரூசோ, கத்தோலிக்கப் பிரிவில் சேரச் சம்மதித்தான் - உடனே அந்தப் பாதிரியார், அன்னெஸி* என்ற ஊரில் வசித்துக் கொண்டிருந்த

---

* Annecy

வாரென்ஸ் சீமாட்டிக்கு* ஒரு சிபாரிசுக் கடிதம் கொடுத்து ரூசோவை அவளிடம் அனுப்பினார். அந்த அம்மாள் ஒரு பணக்காரி; அழகி; அநேகம்பேரை மதம் மாற்றி யிருக்கிறாள்; மனமும் மாற்றியிருக்கிறாள். அவளிடத்தில் போய்ச் சேர்ந்தான் ரூசோ. அவளைச் சந்தித்தான். இருபத்தெட்டு வயதான அவளுடைய அழகிலே, புன்சிரிப்பிலே, இனிய உபசரணை யிலே மயங்கினான். "இவளுக்காக நூறு தடவை வேண்டு மானாலும் மதம் மாறலாமே" என்று சொல்லிக் கொண்டான். நல்ல எண்ணத்தினாலோ, கெட்ட எண்ணத்தினாலோ நமக்குத் தெரியாது. எப்படியோ அவளுடைய முயற்சியாலும் ஆதர வினாலும் பரிசுத்த கத்தோலிக்கனாகி விட்டான். இப்படி ஆனது 1728 - ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் 28 - ஆம் தேதி.

மதம் மாறினால் ஜீவனத்திற்கு வழி ஏற்பட்டு விடுமா? பாதிரிமார்கள் எல்லோருக்கும் ஞானஸ்நானம் செய்வித்தது போல் இவனுக்கும் செய்வித்தார்கள். "ஆண்டவனுடைய திருவருளை எதிர்பார்த்து நல்ல கிறிஸ்துவனாக நடந்து கொள்" என்று உபதேசித்து, ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்த ஒரு நோயாளியை வெளியேற்றுவது போல் இவனை தேவாலயத்தினின்று வெளியே அனுப்பிவிட்டார்கள். இவனுக்குப் பின்னால் ஆலயக்கதவு மூடிக்கொண்டுவிட்டது. வாழ்க்கையின் சூனியம்! அதுதான் இவனை வரவேற்றது.

இவன் கையிலே அப்பொழுது இருபது காசுகளே இருந்தன. இந்த இருபது காசுகளும் எப்படிக் கிடைத்தன? மதமாற்றுச் சடங்கின் போது ஆஜராகியிருக்கிற பலரும், மதம் மாறுகிறவனுக்கு ஏதேனும் காசு போடுவார்கள். இங்ஙனம் காசு

---

* **Madam de Warens**

போடுகிறவர்களுக்கு நல்ல கதி கிடைக்குமாம். இந்த விதமாகவே ரூசோவுக்கு இருபது காசுகள் சேர்ந்தன. இந்தக் காசை வைத்துக் கொண்டு என்ன செய்வது? அப்பொழுதிருந்த தன் மன நிலையை ரூசோ பின்வருமாறு வருணிக்கிறான்:

“என்னுடைய உயர்ந்த நம்பிக்கைகளெல்லாம் சிதறிப் போய்விட்டன. மதம் மாறினால் ஏதோ நல்ல அதிருஷ்டம் எனக்கு வந்து விடுமென்று நான் எண்ணியிருந்தேன். ஆனால் மகத்தான துன்பக் குழியிலே விழுந்துவிட்டதாகத் தெரிந்து கொண்டேன். மதமாற்றுச் சடங்கு நடைபெற்ற தினத்தன்று காலையில் நான் அன்றிரவு ஒரு பெரிய அரண்மனையில் நித்திரை செய்யப் போவதாக எண்ணிக்கொண்டு எழுந்தேன். ஆனால் அன்று ராத்திரி தெருவிலே தூங்கும்படியான நிலைமை ஏற்பட்டது எனினும் நான் மனமுடைந்து போகவில்லை; கண்ணீர் விடவில்லை. புதிய நம்பிக்கையும் புதிய உற்சாகமும் கொண்டேன்.”

ஊர் முழுவதும் சுற்றிப் பார்த்தான். எத்தனை நாட்கள் இப்படிச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருப்பது? சில தினங்களில் கையிலே இருந்த காசுகள் செலவழிந்து விட்டன. தான் கற்றுக்கொண்ட சித்திரஞ்செதுக்கும் வித்தை எங்கேனும் உபயோகப்படுமா என்று ஒவ்வோரிடமாக நுழைந்து நுழைந்து பார்த்தான் எங்கும் இவனை வேண்டுவாரில்லை. கடைசியில் இவனுடைய பரிதாபகரமான நிலையைப் பார்த்து மனமிரங்கி, யாரோ ஒரு சீமாட்டி இவனுக்குச் சாப்பாடு போட்டுச் சில தினங்கள் வரை இவனைக் காப்பாற்றி வந்தாள். அவளுடைய சிபார்சின் பேரில் வேறொரு சீமாட்டியிடம் எடுபிடி ஆளாகப் போய்ச் சேர்ந்தான். நல்ல உடை! நல்ல ஆகாரம்! அவ்வளவு தானே தேவை? ஆனால் இவனுடைய துரதிருஷ்டம், மூன்று

மாதத்திற்குள் அந்தச் சீமாட்டி இறந்துவிட்டாள். மறுபடியும் ஊர் சுற்றினான்! உத்தியோகத்திற்கு அலைந்தான்! சில வாரங்கள் கழித்து வேறொரு பிரபுவின் வீட்டில் கையாளாக அமர்ந்தான். சில நாட்களே இங்கும் உத்தியோகம். இப்படியாகச் சுமார் ஒரு வருடகாலம் பல இடங்களில் அலைந்துவிட்டுக் கடைசியில் வாரென்ஸ் சீமாட்டியிடமே திரும்பவும் வந்து அடைக்கலம் புகுந்தான். அவளுடைய ஆதரவில் சுமார் பத்து வருடத்திற்கு அதிகமாகக் காலங்கடத்தினான் இந்தக் காலத்தில் பாதிரியாக முயன்றான்; பயனில்லை. சங்கீதம் கற்றுக்கொண்டு சங்கீத ஆசிரியனானான்; ஆனால் பலருடைய பரிகாசத்திற்கும் ஆளானான். ஒரு கிரேக்கப் பாதிரியினுடைய அந்தரங்கக் காரியதரிசியாக யிருந்தான். ஒரு ராணுவ உத்தியோகஸ்தனால் சிபாரிசு செய்யப்பட்டு முதன் முதலாகப் பாரிஸுக்குச் சென்று அங்கு ஒரு ராணுவ உத்தியோகஸ்தனிடம் காரியதரிசியா யிருந்தான். ஆனால் எங்கும் இவன் நிலைத்து நிற்கவில்லை.

இங்ஙனம் இவன் செய்யாத வேலைகள் இல்லை; அலையாத இடங்களும் இல்லை. அநேக சந்தர்ப்பங்களில் இவன், இரவுக்காலத்தை சாலையோரத்திலே, மரத்தடியிலே, வயற்காட்டிலே, மணல் மேட்டிலே கழித்திருக்கிறான். இவை யெல்லாம் தனக்குச் சிறந்த அனுபவங்களாயிருந்தன என்று இவன் பிற்காலத்தில் கூறுகிறான். இத்தனை உத்தியோகங்களுக் கிடையே இவ்வளவு அலைச்சல்களுக்கிடையே இவனுக்கு, வாரென்ஸ் சீமாட்டியினுடைய ஆதரவு மட்டும் இருந்து கொண்டே இருந்தது இதனால்தான், "எனதன்புள்ள தாய்" என்று அவளை அழைக்கிறான்.

ஆனால் ரூசோ யாரிடத்திலும் சௌகர்யமாக இருந்தது கிடையாது; எப்பொழுதும் சந்தோஷமாக இருந்ததும் கிடையாது.

இவனைப் போன்ற மனப்பான்மையுடையவர்கள் இப்படித்தான் இருக்க முடியும். ஏனென்றால் இவர்களெல்லோரும் கற்பனை உலகத்தில் வாழ்கிறவர்கள். சாதாரண பிடிக்கு அகப்படாத ஒரு லட்சியத்தை அடையவேண்டுமென்ற ஆவலுடையவர்கள். அந்த லட்சியத்திற்குக் குறைவாயுள்ள எந்தப் பொருளின்மீதும் இவர்களுக்கு வெறுப்புத்தான்; எந்த மனிதரோடும் சண்டைதான். இது இவர்களுக்கு சகஜம். புறத்தோற்றம் எதுவும் இவர்களைத் திருப்தி செய்யாது. அநேக சந்தர்ப்பங்களில் இவர்களுக்கே தெரியாதிருக்கலாம், தாங்கள் அடையவேண்டிய பொருள் இன்னதென்று. ஆனால் ஏதோ ஒன்றை அடைய வேண்டும், அதுவும் மற்ற சாதாரண மனிதர்களால் அடையப்படாததாய் இருக்கவேண்டும் என்ற எண்ணம் மட்டும் இவர்களை உள்ளூர அரித்துக் கொண்டிருக்கும்; ஆம், எரித்துக்கொண்டுமிருக்கும். ரூசோவே கூறுகிறான் ஓரிடத்தில்,

"ஏதோ ஓர் ஆசை என்னை எரித்துக்கொண்டிருந்தது. ஆனால் எதைப் பற்றி அந்த ஆசை என்பது எனக்குத் தெரியாது" என்று.

ரூசோவைப் போன்றவர்கள் தங்களுடைய கற்பனை உலகத்தில் என்ன சிருஷ்டிக்கிறார்களோ அவைகளிடத்தில் தான் சாந்தி பெறுகிறார்கள். அல்லது இயற்கையிலே ஒன்றுபட்டு அதில் தங்கள் சுகதுக்கங்களை இழந்து விடுகிறார்கள். அப்படி இழப்பதிலேதான் இவர்களுடைய துன்பம் இருக்கிறது. ரூசோ இப்படிப்பட்டவர்களில் ஒருவன்

வாரென்ஸ் சீமாட்டிக்கு லெஸ் சார்மெடிஸ்* என்ற ஓர் ஊரில் இயற்கைத் தோற்றத்தின் நடுவில் அழகானதொரு

* **Les Charmettes**

பங்களா இருந்தது. இந்தப் பங்களாவில் சீமாட்டியினுடைய் ஆதரவில் ரூசோ சுமார் இரண்டு வருட காலம் தனியாக வசித்துக் கொண்டிருந்தார். இந்த இரண்டு வருடகாலத்தில் இவர் அனுபவித்த இயற்கைக் காட்சிகளும் படித்த நூல்களும் பல. "நான் தினந்தோறும் சூரியோதயத்தின் போது எழுந்திருப்பேன். உடனே வெளியில் சென்று உலவுவேன். அப்படிச் செல்கிற போது பிரார்த்தனை செய்து கொண்டே செல்வேன். பிரார்த்தனை என்று சொன்னால் உதடுகளை அசைத்துக் கொடுப்பதல்ல. எந்த இயற்கை, என்னுடைய கண்களுக்கு முன்னே அழகோடு சோபிக்கிறதோ, அந்த இயற்கையின் ஆசிரியனான கடவுளின் திருவடியிலே என் இருதயத்தைக் கொண்டு வைப்பேன். எப்பொழுதுமே நான் என் அறை யிலிருந்து கொண்டு பிரார்த்தனை செய்வதை விரும்புவதில்லை. கடவுளுக்கும் என் ஆத்மாவுக்கும் மத்தியில், கல்லும் மண்ணும் சேர்ந்த இந்தச் சுவர்கள் குறுக்கிடுவதாக எனக்குத் தோன்றுகிறது. தவிர, கடவுளின் சிருஷ்டிகளிலேதான் நான் கடவுளைக் காண விரும்புகிறேன். மற்றும் என்னுடைய பிரார்த்தனைகள் எல்லாம் வெறும் கோரிக்கைகளாக இரா. அவருடைய திருவருளை எண்ணி வியப்பதாகவே இருக்கும்." இந்த மாதிரியான தெய்வ நம்பிக்கையுடைய ரூசோ, பிற்காலத்தில் நாஸ்திகனென்றும் மதத் துவேஷி என்றும் தூற்றப்பட்டார்! உலகம், மகான்களை எவ்வளவு தவறாக மதிக்கிறது!

லெஸ் சார்மெடிஸில் வசித்த இரண்டு வருட காலமும் ரூசோவைப் பொறுத்த மட்டில் மிகவும் நிம்மதியான காலம். அநேக நூல்களைப் படித்து அவற்றிலே ஆறுதல் கண்டார்; சில நூல்களை மனப்பாடமும் செய்தார். அப்படிச் செய்தான பிறகு, அந்த நூல்களைப் பத்திரப்படுத்தி வைக்க மாட்டார். மரத்தடி

களிலோ, படுக்கையின் கீழோ, வேலி ஓரத்திலோ, எந்தெந்த இடத்தில் படித்துக் கொண்டிருந்தாரோ அந்தந்த இடத்திலேயே அவை கிடக்கும். இந்தமாதிரி அநேக புத்தகங்கள் பாழாகி விட்டன. ஆனால் இதைப் பற்றி ரூசோ சிறிதுகூடக் கவலைப் பட்டதில்லை.

இப்படி இருக்கிறபோது, வாரென்ஸ் சீமாட்டிக்கும் ரூசோ வுக்கும் இருந்த தொடர்பு மெது மெதுவாகக் குறைந்துகொண்டே வந்தது. எல்லா வகைகளுக்கும், சீமாட்டியினுடைய ஆதரவை, ரூசோ எதிர்பார்த்துக் கொண்டிருந்ததுதான் இதற்குக் காரணமாக இருக்கலாம்.

கடைசியில் வேறொரு குடும்பத்தில் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிற வேலையைத் தேடிக் கொடுத்தாள் ரூசோவுக்கு அந்தச் சீமாட்டி. சுமார் ஒரு வருட காலம் இந்த வேலையைச் செய்து வந்தார் ரூசோ. அரைகுறையான மனத்துடன் இவருடைய போதனையில், குடும்பத்தினருக்குத் திருப்தி உண்டாகவில்லை. இவருக்கும் அந்த வேலையில் இஷ்டமில்லை. கடைசியில் வேலையே வேண்டாமென்று உதறித் தள்ளிவிட்டு வெளியே வந்துவிட்டார் அப்படியே வாரென்ஸ் சீமாட்டியினுடைய ஆதரவையும் உதறித் தள்ளி விட்டார். கிளம்பினார் பாரிஸ் மாநகரை நோக்கி. அப்பொழுது இவருக்கு வயது முப்பது.



# 4. அறிஞர்களின் தொடர்பு

பாரிஸ் மாநகரம் ரூசோவுக்குப் புதிதல்ல. ஏற்கெனவே ஒருமுறை 1731 – ஆம் ஆண்டு இந்த அழகிய பட்டணத்திற்கு வந்து சிறிது காலம் தங்கியிருக்கிறார். முதல் தடவை வந்த போது, இவருக்கு நகரத்தின் கெடுதலான பாகந்தான் புலப் பட்டது. இப்பொழுதோ, நகரத்தின் சிறப்பான அம்சங்களை நோக்கினார். எந்த மனப்பான்மையோடு உலகத்தை நாம் நோக்குகிறோமோ அந்த மனப்பான்மைக்குத் தகுந்தாற் போலவே உலகமும் நமக்குக் காட்சி அளிக்கிறது. இது சகஜந்தானே?

பாரிஸுக்கு வந்தபோது ரூசோவின் ஆஸ்தி பதினைந்து பொற்காசுகள். தான் எழுதிய இசை நாடகமொன்றின் கையெழுத்துப் பிரதி, சங்கீதத்தைச் சுலபமாகப் பயிலுவதற்காகத் தான் கண்டுபிடித்த முறை, சில பெரிய மனிதர்களுக்கு அறிமுகக் கடிதங்கள் ஆகிய இவைதான். கையிலே சிறிது பணம் இருந்தபடியால். இவர் முதலில் சாப்பாட்டுக்குக் கஷ்டப் படவில்லை. சில முக்கியஸ்தர்களைப் பார்த்து அவர்களுடைய சிநேகத்தைச் சம்பாதித்துக் கொண்டார். அவர்களும் இவரிடம் அன்பு பாராட்டி இவரை ஓர் உத்தியோகத்தில் அமர்த்த

முயன்றனர். ஆனால் இவர், அப்பொழுது தனக்கு எவ்வித உத்தியோகமும் வேண்டாமென்று சொல்லி விட்டார். பணக்காரப் பிரபுக்களின் மாளிகைகளுக்குச் செல்வதும், அங்குள்ள சீமாட்டிகளுடன் விருந்துண்பதும், அவர்களுக்குத் தனது புதிய சங்கீத முறையைப்பற்றிச் சொல்வதும், தனது இசை நாடகத்தை அவர்களுக்கு வாசித்துக் காட்டுவதுமாகக் காலங்கழித்தார்.

பாரிஸில், அறிஞர் கழகமொன்று இருந்தது. இந்தக் கழகத்தின் காரியதரிசி, ரூசோவுக்குத் தெரிந்தவன். அவன் தன் கழகத்தின் கூட்டமொன்றைக் கூட்டுவித்து அதில் ரூசோவின் புதிய சங்கீத முறையை அரங்கேற்றும்படி செய்வித்தான். இதன் மூலமாக ரூசோவின் பெயர் பிரபலமாகும் என்று அந்த நண்பன் கருதினான். கழக அறிஞர்கள், ரூசோவின் சங்கீத முறையைக் கேட்டார்கள். இவரைப் பாராட்டினார்கள். பின்னர் மூன்று நிபுணர்கள் அடங்கிய ஒரு சிறு கமிட்டியை நியமித்து, இவருடைய முறையைப் பரிசீலனை செய்து ஓர் அறிக்கை தயாரிக்குமாறு கூறினார்கள். அந்தக் கமிட்டியினரோ, இவருடைய முறை புதியதுமல்ல, இதனால் பயனும் இல்லையென்று தங்கள் அறிக்கையின் மூலம் தெரிவித்து விட்டார்கள். ஆயினும் கழகத்தினர் இவருக்கு ஒரு சன்மானப் பத்திரம் அளித்தனர்.

கழகத்தினர், தன் முறையை அங்கீகரிக்கவில்லை என்பதற்காக ரூசோ மனச்சோர்வு கொள்ளவில்லை. தனது முறையைப்பற்றி ஆராய்ச்சிப் பூர்வமாக ஒரு கட்டுரை எழுதி அதனை ஒரு புத்தகமாக வெளியிடச் செய்தார். புத்தகத்தைக் கவனிப்பார் யாருமில்லை. பிறகு ஓர் அமெரிக்க பெண்ணுக்கு அந்த முறையை இலவசமாகச் சொல்லிக் கொடுத்தார். அவள் மூன்று மாதத்தில் கற்றுக்கொண்டு அந்த முறையைப் பின்பற்றி

ஒரு கச்சேரி செய்தாள். எல்லோரும் பாராட்டினார்கள். ஆனால் பின்பற்றுவார் ஒருவருமில்லை.

இந்த மாதிரி தோல்விமேல் தோல்வி ஏற்பட்டதும், ரூசோவுக்கு ஒருவித அசட்டை மனப்பான்மை உண்டாகி விட்டது. நடக்கிறபடி நடக்கட்டும் என்று தன் வாழ்க்கையை அதன் போக்கிற்கே விட்டுவிட்டார். ஒன்றுவிட்டு ஒருநாள் ஹோட்டலுக்குப் போவது, வாரத்திற்கு ஒருமுறை நாடகக் கொட்டகைக்குச் செல்வது - இப்படியாக சிறிது காலம் கழித்தார். பெரிய மனிதர்களின் சல்லாபத்தைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டார். ஓய்ந்த நேரங்களில் பழைய காவியங்களிலிருந்து சில முக்கியமலான பாகங்களை நெட்டுருச் செய்தார். முக்கிய மான சில அறிஞர்களை மட்டும் அடிக்கடி சந்தித்து அவர் களுடைய அன்பையும் ஆதரவையும் பெற்று வந்தார். இங்ஙனம் இவரிடம் அன்பு செலுத்திய முக்கிய அறிஞர்களில் ஒருவன் டிடெராட்[1] என்பவன்.

டிடெராட்டும் ரூசோவும் ஏறக்குறைய ஒரே வயதினர். ஒரே மனப்பான்மை உடையவர்கள். கலை, இலக்கியம், தத்துவம் முதலிய எல்லாத்துறைகளையும் பற்றி இன்றைய தினம் பிரெஞ்சு மொழியில் ஒரு பேரகராதி இருக்கிறதென்று சொன்னால் அதற்கு இந்த டிடெராட்டின் சலியாத உழைப்புத்தான் காரணம். இவனும் டி'அலெம்பர்ட்[2] என்பவனும் சேர்ந்துதான் இந்த அகராதியைத் தயாரித்தார்கள். இந்த அகராதியிலே வகுக்கப்பட்ட சில கொள்கைகளைப் பின்பற்றித் தனியாக ஒரு கட்சியினரும் பிற்காலத்தில், அதாவது பிரெஞ்சுப் புரட்சியின் போது தோன்றி விட்டார்கள் இவர்களுக்கு "அகராதிவாதிகள்"[1] என்று பெயர்.

---

**1. Diderot 1713 - 1784** **2. D'Alembert 1717 - 1783**

இந்த டிடெராட் ஒரு மகா மேதாவி. கற்பனாசக்தி நிரம்பியவன். அநேக நூல்களின் ஆசிரியன். ஆனால் இவனுடைய வயோதிகக் காலம், வறுமைக் கோலமாகவே இருந்தது. சொல்ல முடியாத கஷ்டங்களைப் பட்டான். கடைசியில் இவனுடைய அறிவை வியந்து பாராட்டிவந்த ருஷ்ய சக்கரவர்த்தினியான இரண்டாவது காதரைன்[2] இவன் சேகரித்து வைத்திருந்த புத்தகங்களை எல்லாம் அப்படியே விலை கொடுத்து வாங்கிக் கொண்டாள். இவனை, அந்தப் புத்தக சாலைக்கு அதிகாரியாக நியமித்து, ஐம்பது வருட சம்பளத்தை முன் பணமாகவே கொடுத்து விட்டாள். இப்படிப்பட்ட டிடெராட்டினுடைய சிநேகம் ரூசோவுக்குக் கிடைத்தது. டிடெராட் மூலமாக வேறு பலருடைய தொடர்பும் இவருக்கு உண்டாயிற்று. ஆனால் பெரிய மனிதர்களுடைய சிநேகம் இருந்தால் வயிறு நிரம்பி விடுமா?

எவ்வளவு காலம் இப்படிச் சும்மா இருந்து கொண்டிருப்பார் ரூசோ? கையிலிருந்த பணம் முழுவதும் கரைந்து விட்டது. ஏதேனும் ஓர் உத்தியோகத்தைத் தேடிக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நல்ல வேளையாக இந்தச் சமயத்தில் இவருக்கு வயிற்றுணவு அளித்து, இவருடமிருந்து செவியுணவு பெற்றுவந்த சில சீமாட்டிகள் இவருக்கு உத்தியோகம் சம்பாதித்துக் கொடுக்கிற விஷத்தில் சிறிது சிரத்தை எடுத்துக் கொண்டனர். இவர்களுக்குத் தெரிந்த பிரபு வம்சத்தைச் சேர்ந்த

---

1. *என்ஸைக்ளோபீடிஸ்ட்ஸ் - 18ஆம் நூற்றாண்டின் பிரபல பிரெஞ்சு ஆசிரியர்களான வால்ட்டேர், ரூசோ, மாண்டெஸ்கு, டி'அலெம்பர்ட், டிடெராட் முதலியோர் இந்த அகராதி தயாரிப்பதில் பங்கெடுத்துக் கொண்டவர்கள். இது, இருபத்தெட்டு பகுதிகளாக வெளிவந்தது. இந்த அகராதி வாதிகளிற் சிலர் பிற்காலத்தில் ரூசோவுக்கு விரோதமான பிரசாரத்தில் ஈடுபட்டார்கள்.*

2. **Catherine II 1729 - 1796**

ஒருவன், இத்தாலியிலுள்ள வெனிஸ் நகரத்தில் பிரெஞ்சு அரசாங்கத்தின் ஸ்தானிகனாக நியமிக்கப்பட்டான். அவனுக்கு இத்தாலிய மொழி தெரிந்த ஒரு காரியதரிசி தேவையாயிருந்தது. சீமாட்டிகள், ரூசோவின் பெயரைச் சிபாரிசு செய்தார்கள். அந்த ஸ்தானிகனும் இவரைக் காரியதரிசியாக நியமித்துக் கொண்டான்.

ரூசோவும், பாரிஸைவிட்டு வெனிஸ் நகரம் சென்று உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டார். சுமார் ஒன்றரை வருட காலம் வேலை பார்த்தார். இந்தக் காலத்தில், காரியாலயத்தில் அநேக சீர்திருத்தங்கள் செய்தார். இதற்கு முன்னர், இத்தாலிக்குப் பிரயாணிகளாகவோ, வயிற்றுப் பிழைப்பு நிமித்தமோ வந்து போகும் பிரெஞ்சுப் பிரஜைகளுக்கு அதிக கஷ்டங்கள் இருந்தன. ரூசோ, தனது நிர்வாக சாமர்த்தியத்தினால் இவைகளை எல்லாம் தீர்த்து வைத்தார். பிரெஞ்சுக்காரர்களுக்கு அநேக சௌகரியங்கள் செய்து கொடுத்தார். ஆனால் ஸ்தானிகனுடைய காரியாலயத்தில் சிப்பந்திகளாக இருந்தவர்களுக்கு இவை எல்லாம் பிடிக்கவில்லை. ஏனென்றால் அவர்கள் எல்லோரும் இத்தாலியர்கள். ரூசோவின் சீர்திருத்தத்தினால் அவர்கள் இதுகாறும் அநுபவித்து வந்த சலுகைகள் யாவும் போய்விட்டன. இதனால் அவர்கள் ரூசோவின்மீது வருத்தங்கொண்டார்கள். இந்த வருத்தமானது, ஸ்தானிகனுக்கும் இவருக்கும் மனஸ்தாப மாக முற்றிவிட்டது. ஸ்தானிகனும் இவரைச் சில சந்தர்ப்பங் களில் மரியாதைக் குறைவாக நடத்தினான் இவைகளை எல்லாம் ரூசோவினால் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை. பதவியை ராஜினாமா செய்து விட்டார். வெனிஸிலேயே சிறிது காலம் தங்கி வேறு ஏதாவது உத்தியோகம் அகப்படுமாவென்று சுற்றிப் பார்த்தார். வெனிஸ் நகரத்தின் அழகை அநுபவித்தாரே தவிர, உத்தியோகம் ஒன்றையும் சம்பாதித்துக் கொள்ள முடியவில்லை.

மறுபடியும் பாரிஸ் வந்து சேர்ந்தார். சுயமாகச் சிந்தித்துச் சுயமாக நடக்க ஆவல் கொள்கிறவன், உலக வாழ்விலே எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்கிறது

ரூசோ, பாரிஸ் வந்து சேர்ந்ததும், செயிண்ட் குவெண்டின்[1] என்ற ஒரு ஹோட்டலில் தங்கினார். அங்கே தெரேஸே லெவாஷீர்[2] என்ற ஒரு பெண் இருந்தாள். அவளுக்கும் இவருக்கும் காதல் ஏற்பட்டது. இருவரும் சட்ட ரீதியாக விவாகம் செய்து கொண்டதாகத் தெரியவில்லை. ஆனால் இருவரும் சுமார் முப்பது வருடத்திற்கு அதிகமாக புருஷனும் மனைவியு மாக வாழ்ந்து வந்தார்கள். இவர்களுக்கு பிறந்த குழந்தைகள் மொத்தம் ஐந்து. இந்தக் குழந்தைகளை ரூசோ, தன் குடும்பத்திலே வைத்துக் கொள்ளவில்லை. அநாதைகள் விடுதியில் விட்டு அவற்றின் பராமரிப்புக்கு ஏற்பாடு செய்தார்.

தெரேஸேவுக்கு எழுதப்படிக்கத் தெரியாது. அவளைப் படிக்க வைக்க ரூசோ எவ்வளவோ முயன்றார். பயனில்லை. இருந்தாலும் அவளுக்கு உலக விவகாரங்கள் தெரிந்த மாதிரி யாருக்கும் படித்த பலருக்கும்கூட - தெரியாதென்றுதான் சொல்ல வேண்டும். "ஸ்விட்சர்லாந்து, இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய நாடுகளில் நான் வசித்துக் கொண்டிருந்தபோது எனக்குப் பல துன்பங்கள் ஏற்பட்டன. அந்தக் காலங்களில் எனக்குப் புலப்படாத விஷயங்கள் பல அவளுக்குப் புலப்படும். அவள், எனக்கு நல்ல புத்திமதிகளைச் சொல்வாள். இன்னபடி செய்ய வேண்டுமென்று எனக்கு வழி காட்டுவாள். பிரபுக்கள், பணக்காரச் சீமாட்டிகள் முதலியோர் முன்னிலையில் அவள் மரியாதை தெரிந்து நடந்து கொள்வாள். இங்ஙனம் நடந்து

---

1. Hotel Saint - Quentin 2. Therese Le Vasseur

கொண்டதன் மூலமாக அவள் பலருடைய மதிப்பையும் பெற்றாள். பலர் அவளைப் பாராட்டினார்கள்.” என்று தெரேஸேயைப்பற்றி ரூசோ தன் சுயசரிதத்தில் குறிப்பிடுகிறார். சுருக்கமாகச் சொல்லுமிடத்து இந்தத் தெரேஸேதான், ரூசோவுக்குக் கடைசிக் காலம் வரையில் உற்ற துணையாக இருந்து ஆறுதல் கொடுத்துக் கொண்டு வந்தாள்.

செயிண்ட் குவெண்டின் ஹோட்டலில் தங்கிக் கொண்டு, தெரேஸே லெவாஷீருடன் காதல் செய்து கொண்டிருந்தால் வாழ்க்கை நடைபெறுவதெப்படி? ஏதேனும் பிழைப்புக்கு வழி தேட வேண்டுமல்லவா? எனவே ரூசோ ஒரு சிறிய இசை நாடகம் எழுதினார். இதனை நடிக்கச் செய்து சிறிது பணம் சம்பாதிக்கலாமென்று பார்த்தார். அப்படியே நடித்துக் காட்டப் பட்டது. ஆனால் எதிர் பார்த்தபடி வருமானம் கிடைக்கவில்லை. அற்ப சொற்பமாகச் சம்பாதித்த பணமும் அவ்வப்பொழுது லெவாஷீர் குடும்பத்திற்குச் செலவாகிக் கொண்டு வந்தது. தெரேஸேயின் தாயார் ஒரு கொடுமைக்காரி; வந்நெஞ்சம் படைத்தவள். தன் மகளுக்கும் ரூசோவுக்கும் கள்ள நட்பு உண்டாகி இருப்பது தெரிந்து ரூசோவிடமிருந்து எவ்வளவு பணம் பறிக்க முடியுமோ அவ்வளவு பணத்தையும் பறித்து வந்தாள். தெரேஸேவையும் அடிக்கடி துன்புறுத்தி வந்தாள். இவையெல்லாம் ரூசோவுக்கு அதிக மனவேதனையை அளித்தன.

இவருக்குத் தெரிந்த பிராங்குவெயில்* என்ற ஒரு சீமான், ரசாயன சாஸ்திர சம்பந்தமாகச் சில ஆராய்ச்சிகள் செய்து அவைகளை ஒரு புத்தக ரூபமாக வெளியிட வேண்டுமென்று

* **M. De Francueil**

முயன்று கொண்டிருந்தார். அவர், ரூசோவின் உதவியை நாடினார். ரூசோவும், ஒரு சிறு தொகையைப் பெற்றுக்கொண்டு அவருக்கு உதவி செய்து வந்தார். இதே சமயத்தில், வேறொரு சீமாட்டி ரூசோவுக்கு ஏற்கனவே பரிச்சயமாகி இருந்தவள் – தான் ஏதோ புத்தகம் எழுதப்போவதாகச் சொல்லி ரூசோவின் உதவியைக் கோரினாள். இதற்காக ரூசோவுக்கு ஒரு சிறு தொகையையும் கொடுத்து வந்தாள். இவைகளைக் கொண்டு இவர் ஜீவனத்தை நடத்தி வந்தார். இடையிடையே தன் மனச் சாந்திக்காகச் சில கவிதைகள் புனைந்தார். வேடிக்கை நாடகமொன்று இயற்றினார். ஒருவிதமாகக் காலம் கழிந்துகொண்டு வந்தது.



# 5. பரிசு பெற்ற கட்டுரை

**1749** - ஆம் ஆண்டு கோடை காலத்தில் ஒருநாள், பாரிஸுக்கு சமீபத்திலுள்ள வின்கென்னெஸ்[1] என்ற இடத்திற்குச் சாலை வழியாக நடந்து சென்றுகொண்டிருந்தார் ரூசோ. ஏன்? இவருடைய நண்பனான டிடெராட் "குருடர்களைப் பற்றின ஒரு கடிதம்" என்ற தலைப்பிட்டு ஒரு நூலை எழுதி வெளியிட்டதற் காக அரசாங்கத்தால் வின்கென்னெஸிலுள்ள சிறையில் வைக்கப்பட்டிருந்தான். அவனை அடிக்கடி சென்று பார்ப்பது ரூசோவின் வழக்கம். இந்த வழக்கப்படி மேற்படி தினத்தன்று புழுதி நிறைந்த அந்தப் பாதையிலே போய்க்கொண்டிருந்தார். போகும்பொழுது ஒரு பிரெஞ்சுப் பத்திரிகையைப் படித்துக் கொண்டே சென்றார். அதில் டிஜோன் இலக்கியக் கழகத்தார்[2] "கலைகளும் விஞ்ஞானமும் விருத்தியடைந்திருப்பதால் மனிதனுடைய ஒழுக்கம் உயர்வடைந்திருக்கிறதா?" என்பதைப்

---

1. **Vincenness.** பாரிஸுக்குக் கிழக்கே ஐந்து மைல் தூரத்தில் உள்ளது.

2. **Academy of Dijon.** டிஜோன் என்பது பாரிஸுக்குச் சமீபத்தில் இருக்கிறது.

பற்றிச் சிறந்த கட்டுரை எழுதுகிறவர்களுக்குப் பரிசு அளிக்கப் படும் என்று ஓர் அறிக்கை வெளியிட்டிருப்பதைப் படித்தார். அதைப் படித்ததும் இவருடைய உடல் முழுவதும் ஒரு குலுங்கு குலுங்கியது. புதிய உணர்ச்சியும் புதிய சக்தியும் பெற்றவர் போலானார். ஆயிரக் கணக்கான எண்ணங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அலைகள் போல் வந்து உள்ளத்தை மோதின. புதியதோர் உலகத்தைக் கண்டார். அந்தப் புதிய உலகத்தில், தான் ஒரு புதிய மனிதனாக இருப்பதைப் பார்த்தார். மார்பு படபடத்தது. மூச்சுத் தடுமாறியது. உடனே மரத்தடியில் உட்கார்ந்துவிட்டார். சுமார் கால்மணி நேரம் இப்படி உட்கார்ந்திருந்தார். பிறகு சாந்தி ஏற்பட்டது. "இந்தப் பதினைந்து நிமிட நேரத்தில் என் உள்ளத்தில் தோன்றிய பல எண்ணங்களைத்தான் 'இலக்கியம், கலை இவைகளைப் பற்றிய விரிவுரை' என்ற நூலிலும் 'மனிதர் களிடையே ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டதற்குக் காரணமென்ன' என்ற நூலிலும் 'எமிலி' என்ற கல்வியைப் பற்றிய நூலிலும் அப்படியும் இப்படியுமாகத் தெளித்திருக்கிறேன்" என்று ரூசோ தன் சுயசரிதத்தில் கூறுகிறார்.

பிறகு வின்கென்னெஸுக்குச் சென்று இந்த விஷயத்தை டிடெராட்டிடம் சொன்னார். "அவசியம் நீ இந்தப் போட்டிப் பரிசுக்கு முயற்சி செய்ய வேண்டும்" என்று அவனும் ரூசோவை வற்புறுத்தினான். ரூசோவும் அப்படியே சில தினங்களில் இந்தக் கட்டுரையை எழுதி டிஜோன் கழகத்திற்கு அனுப்பிவிட்டார். அதனோடு தனது துயரம் நிறைந்த வாழ்க்கையையும் அனுப்பி விட்டார். புதிய வாழ்வு பெற்றார்.

டிஜோன் கழகத்திற்கு இது பற்றி மொத்தம் பதினைந்து பேர் கட்டுரைகள் எழுதி அனுப்பி இருந்தார்கள். இந்தப் பதினைந்து கட்டுரைகளிலும் ரூசோ எழுதிய கட்டுரை தான் சிறந்ததென்று

கழகத்தினர் ஒப்புக்கொண்டு இதற்குப் பரிசு வழங்கினர். கட்டுரையும் அச்சாகி புத்தக வடிவமாக வெளி வந்தது. அவ்வளவுதான். இலக்கிய உலகத்திலே ரூசோவுக்கு ஒரு முக்கிய ஸ்தானம் கிடைத்து விட்டது. பெயர், புகழ், பணம் எல்லாம் ஒன்றாக வந்தன. இந்தக் காலத்தில் டிடெராட் இவருக்கு நிரம்ப உதவியாக இருந்தான். ரூசோ, தனக்குப் பரிசு அளித்த டிஜோன் இலக்கியக் கழகத்தாருக்கு நன்றி பாராட்டி அருமை யானதொரு கடிதம் எழுதினார். அது பின்வருமாறு:

*“கனவான்களே,*

*எனக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கை இல்லாமல் இருந்த எனக்கு நான் எந்தப் பரிசுக்குப் போட்டியிட்டேனோ அந்தப் பரிசை எனக்கு வழங்கி என்னைக் கௌரவப்படுத்தி இருக்கிறீர்கள். நான் எதிர்பாராமலிருக் கையிலேயே இந்தப் பரிசு எனக்குக் கிடைத்தமையால், இது எனக்கு மிகவும் பிரியமுடையதாய் இருக்கிறது. உங்களுடைய பரிசைக் காட்டிலும் உங்களுடைய மதிப்பைத்தான் நான் முக்கியமாகப் போற்றுகிறேன். எது உண்மை என்று நான் கருதினேனோ அதனையே நான் எழுதினேன். அதற்குப் பரிசு என்னும் மகுடஞ் சூட்டி இருக்கிறீர்கள். கனவான் களே. எனக்குப் புகழ் தருவித்துக் கொடுத்தீர்கள். அதன் மூலமாக உங்களுடைய புகழையும் அதிகப்படுத்திக் கொண்டீர்கள். இதற்கு முன்னர் நீங்கள் அளித்த பல தீர்ப்புகளுக்கும் உங்களுடைய விவேகத் திற்குப் பெருமை அளிப்பதாக இருக்கலாம். ஆனால் இப்பொழுது நீங்கள் அளித்திருக்கிற பரிசு உங்களுடைய நேர்மைக்குப் பெருமை அளிப்பதாயிருக்கிறது.*

இங்ஙனம்
*மிகவும் பணிவுள்ள*
ரூசோ”

ரூசோவின் சுதந்திர மனப்பான்மையும், நன்றி பாராட்டுந் தன்மையும் இந்தக் கடிதத்தின் மூலம் அவ்வளவு அருமையாக வெளியாகியிருக்கின்றன!

மேற்படி கட்டுரை, நூல்வடிவமாக வெளிவந்ததும், ஐரோப்பிய ஜனசமூகத்தில் ஒரு கிளர்ச்சி ஏற்பட்டது. சம்பிரதாயம் என்னும் அஸ்திவாரத்தின் மீது கட்டப்பெற்றிருந்த சமுதாயம் என்னும் மணல் வீட்டின் மேல் ஒரு கல்லைத் தூக்கிப் போட்டது போல் இருந்தது. இந்தமாதிரி ஒரு கல்லைத் தூக்கிப் போட வேண்டுமென்ற எண்ணம் பலருக்கு இருந்திருக்கலாம். ஆனால் யார் போடுவது? இதற்குத் துணிச்சல் வேண்டுமே. இந்தத் துணிச்சலுக்காகத்தான் அன்று ரூசோ கௌரவப்படுத்தப்பட்டார்.

பரிசுத்தொகை கிடைத்துவிட்டது. நூல் வெளியீட்டின் மூலம் வருமானம். அவ்வளவுதான், செலவழிக்கத் தலைப்பட்டு விட்டார் ரூசோ. இந்தக் காலத்தில் இவர் கொஞ்சம் நன்றாகவே வாழ்ந்தார் என்று சொல்லவேண்டும். இவரும் தெரேஸேயும் அடிக்கடி உலாவச் செல்வார்கள். நல்ல ஹோட்டல்களில் சாப்பிடுவார்கள். எங்கெல்லாம் இயற்கைக் காட்சிகள் காணப்பட்டனவோ அங்கெல்லாம் சென்று இயற்கைக் காட்சிகளை அனுபவித்தார்கள். இரண்டு பேரும் இந்தக் காலத்தில் ஒன்று சேர்ந்து குடும்பமொன்றை ஏற்படுத்திக் கொண்டார்கள். ரூசோ, இந்தக் காலத்தில், தனது உடை அணிந்து கொள்ளும் முறையைக்கூட மாற்றிக்கொண்டு விட்டார். தன் கைக் கடியாரத்தை விற்றுவிட்டார். உலக சம்பிரதாயங்களை ஒட்டி வாழ்க்கையை நடத்த வேண்டுமென்ற கட்டாயம் என்ன என்பது இவர் கேள்வி.

சாதாரணமாகவே மகான்களென்று வருங்காலத்திலே அழைக்கப்படுகிற நிகழ்காலப் பித்தர்கள், சம்பிரதாயங்களை

மீறிச்செல்கிற சுபாவமுடையவர்கள். இவர்களால் பணத்தின் அருமையைக் கொஞ்சங்கூடத் தெரிந்துகொள்ள முடிவதில்லை. இவர்களுக்குச் சம்பாதிக்கத் தெரியாது. ஆனால் செலவழிக்க நன்றாகத் தெரியும். இவர்கள் பெறுவதை அறியார். கொடுப்பதையே அறிவர். இறுக்கிப் பிடிப்பதிலே, குவித்து வைப்பதிலே, ஒடுக்கிப் பார்ப்பதிலே இவர்களுக்கு நம்பிக் கையே கிடையாது. திறந்த வெளிதான் இவர்களுடைய வாசஸ்தலம். விசால மனந்தான் இவர்களுடைய ஆபரணம். சேவைதான் இவர்கள் அடைகிற இன்பம். ரூசோ இத்தகைய வரில் ஒருவரானார்.

இப்படி வந்த பணத்தை எல்லாம் சீக்கிரமாக சுலபமாகச் செலவழித்துவிட்டார் ரூசோ. குடும்ப பாரம் ஒன்றைப் புதிதாக ஏற்றுக்கொண்டிருந்தாரல்லவா? இதனை எப்படியாவது சமாளித்துக்கொண்டு போகவேண்டுமே. மறுபடியும் உத்தியோ கத்தை நாடி ஓடலானார்.

ஏற்கெனவே இவர், பிராங்குவெயில் என்ற ஒரு சீமானுடைய ரசாயன சாஸ்திர ஆராய்ச்சிக்கு உதவி செய்து கொண்டிருந்தார் என்பது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கும். அந்தச் சீமான் இப்பொழுது பிரெஞ்சு அரசாங்கத்தின் பொக்கிஷ இலாகா தலைவனாக இருந்தார். அவருக்குக் கீழ் பொக்கிஷ தாரனாக அமர்ந்து சிறிது காலம் உத்தியோகம் பார்த்தார் ரூசோ. உத்தியோகத்தின் நடுவில் இவருக்கு நரம்புத் தளர்ச்சி சம்பந்தமான ஒரு நோய் தோன்றிவிட்டது. சுமார் ஆறு வார காலம் படுக்கையிலே கிடந்தார். அப்பொழுது இவருக்குச் சிகிச்சை செய்து கொண்டுவந்த ஒரு வைத்தியர் இவர் இன்னும் ஆறுமாத காலந்தான் ஜீவித்திருப்பார் என்று சொல்லிவிட்டார். இதை யாரோ இவர் காதிலே போட்டுவிட்டார்கள். உயிரோடிருக்கிற வரையில் சுதந்திரத்தோடு இருப்பதென்று

தீர்மானித்துவிட்டார். உலக ஆசைகளைத் துறந்துவிட வேண்டு மென்று முடிவு செய்துகொண்டார். இவற்றின் விளைவு என்ன? பொக்கிஷதாரர் உத்தியோகம் போய்விட்டது. பின்னர் இசைப் பாடல்களை நகல் செய்துகொடுத்துச் சம்பாதித்தார். சங்கீதப் பிரியர்கள் சிலர், ஒரு பக்கத்திற்கு இவ்வளவென்று ஒரு திட்டம்போட்டு அதன் பிரகாரம் இவருக்குக் கொடுத்து வந்தார்கள். இந்தத் தொழில் இவருக்கு நிரம்பப் பிடித்திருந்தது. இந்தத் தொழிலோடுகூட, நடிப்பதற்குத் தகுதியுடையதான இசை நாடகமொன்று எழுதினார். இது நடித்துக் காட்டப்பட்டது. அனைவரும் பாராட்டினர். ஆனால் இவர் மீது பலரும் பொறாமை கொள்ளத் தொடங்கினர்.

1753 - ஆம் ஆண்டு நவம்பர் மாதம் டிஜோன் கழகத்தார், மற்றொரு பரிசுக்கான கட்டுரையை விளம்பரப்படுத்தி இருந்தனர். "மனிதர்களிடையே ஏற்றத் தாழ்வுகள் உண்டான தற்குக் காரணமென்ன? இவற்றை இயற்கைச் சட்டங்கள் அங்கீகரிக்கின்றனவா?" என்ற வினாவைக் கொடுத்து விடை அளிக்கும்படிக் கேட்டிருந்தனர் கழகத்தார். ரூசோ இந்தப் போட்டியில் கலந்து கொள்வதென்று தீர்மானித்தார். இதற்காக - கட்டுரை எழுதுவதற்காக தெரேஸேயுடன் இயற்கையழகு செறிந்திருந்த ஓர் இடத்திற்குச் சென்றார். அங்குச் சிலகாலம் தங்கிக் கட்டுரையை எழுதி முடித்தார். கழகத்திற்கு அனுப்பினார்.

ஆனால் இந்தத் தடவை இவருக்குப் பரிசு கிடைக்க வில்லை. வேறொரு பாதிரிக்குக் கிடைத்தது. பரிசு கிடைக்க வில்லையே என்பதற்காக ரூசோ மனமுடைந்து போகவில்லை. இவருக்குப் பரிசு கிடைக்கவில்லையானாலும், கட்டுரை நூல் வடிவமாக வெளிவந்ததும், இவருடைய புகழ் முன்னிலும் பன் மடங்கு அதிகமாயிற்று.



# 6. தாய்நாட்டுப் பற்று

இரண்டாவது கட்டுரையை எழுதி டிஜோன் கழகத்திற்கு அனுப்பிவிட்டு, ஜெனிவா போகவேண்டுமென்ற எண்ணம் ரூசோவுக்கு உண்டாயிற்று. ஆனால், தான் ஒரு கத்தோலிக்க னாகி விட்டபடியால் அங்கே உரிமையுள்ள ஒரு பிரஜையாகச் செல்ல முடியாதென்பது இவருக்குத் தெரியும். உரிமையுள்ள ஒரு பிரஜையாகவே தன் தாய்நாட்டில் சென்று இருக்க விரும்பினாரே தவிர, சாதாரண ஒரு மனிதனாகச் சென்று இருக்க விரும்பவில்லை. எனவே ஜெனிவா சென்றதும், கத்தோலிக்க மதத்தைத் துறந்தார். பழைய புராடெஸ்டெண்ட் மதத்தைத் தழுவிக் கொண்டார். பிரஜா உரிமையைப் பெற்றார். ஜெனிவா குடியரசின் சுதந்திரக் காற்று இவர் தேகத்திலே பட்டு, உள்ளத்திலே புதிய சக்தியை உண்டு பண்ணியது. பிரஜா உரிமையோடு வாழவேண்டுமென்பதற்காக இவர் மதத்தைக் கூடத் துறந்து விட்டார். சுதந்திரம் பெரிதா? மதம் பெரிதா?

ஜெனிவா வாசிகள் இவரை ஆடம்பரமாக உபசரித்தார்கள். தங்களிலே ஒருவன், டிஜோன் இலக்கியக் கழகத்தாரால் பரிசு பெற்றதும் இலக்கிய உலகத்தில் இவருக்கு நிரந்தரமானதொரு

ஸ்தானம் கிடைத்திருப்பதும் தங்கள் அனைவருக்கும் ஒரு பெருமை என்று கருதினார்கள். இவர்களுடைய அன்பான உபசரிப்பிலே சுமார் நான்கு மாத காலம் ரூசோ ஜெனிவாவில் தங்கினார். பின்னர் பாரிஸுக்கு வந்தார். அப்பொழுது இவருடைய இரண்டாவது கட்டுரை நூல் வடிவமாக வெளி வந்தது. இதுவும், முதல் கட்டுரையைப்போல் ஐரோப்பிய ஜனசமுதாயத்திலே ஓர் அதிர்ச்சியை உண்டு பண்ணியது. “இந்த இரண்டு கட்டுரைகளும் சேர்ந்து உலகத்தையே அசைத்துக் கொடுத்து விட்டன” என்று ஓர் ஆங்கில ஆசிரியன் கூறுகிறான்.



தனக்கு உபகாரம் செய்தவர்களை ரூசோ எப்பொழுதும் நினைத்தாகத் தெரியவில்லை. ஏன் இதை இங்குக் குறிப்பிட வேண்டி இருக்கிறதென்றால் இவருடைய ஜீவிய சரித்திரத்தை எழுதியுள்ள சில ஆசிரியர்கள், இவரை ஒரு நன்றிகெட்ட மனிதனாக அலங்கரித்துத் திருப்தி கொண்டிருக்கிறார்கள். ஆனால் இவரை ஓர் எதிர்கால புருஷனாகக் கருதிக்கொண்டு, அந்த நிலையில் இவரை வைத்து, இவருடைய நடவடிக்கைகளைப் பொருத்திப் பார்த்தால்தான், இவர் மனித குணங்களுடைய ஒரு மனிதன் என்பது நன்கு தெரியவரும். இவர் அநேக சந்தர்ப்பங்களில் தன்னை ஆதரித்த நண்பர்களுடன் சண்டை போட்டிருக்கிறார் என்பது உண்மை. அவர்களில் சிலரைத் தனது எழுதுகோலினால் தாக்கி இருக்கிறார் என்பதும் உண்மை. ஆனால் எவ்வித காரணமும் இல்லாமலா? அநியாயமாகவா? இல்லவே இல்லை. யார் இவருடைய ஆத்மாவின் அஸ்திவாரத்தையே தாக்கி இருக்கிறார்களோ அவர்களை இவர் திருப்பித் தாக்கி இருக்கிறார். நன்றாகவும்

தாக்கி இருக்கிறார். ஆனால் கண்ணியமாகத்தான். இவர், தன் இறுதிக் காலத்தில், தனது சுயசரிதத்தை "**எனது குற்றங்களின் அங்கீகாரம்**"[1] என்று பெயர் கொடுத்து எழுதி இருக்கிறார். இதில் தன்னை ஓர் அந்நியனாகக் கருதிக் கொண்டு, தனது குற்றங் குறைகளை எல்லாம் ஒளிவு மறைவின்றி எடுத்துக் காட்டி இருக்கிறார். இது இவருடைய பெருமையைக் காட்டுகிறதே தவிர சிறுமையைக் காட்டவில்லை. ஆனால், ஜாதிப்பற்று நிரம்பிய சில ஆசிரியர்கள், ரூசோவின் சுயசரிதத்தை ஆதாரமாக வைத்துக் கொண்டே ரூசோவைத் தாக்குகிறார்கள்.

ரூசோவின் நன்றி விசுவாசத்திற்கு உதாரணமாக ஒரு நிகழ்ச்சியை மட்டும் இங்கு குறிப்பிட்டுவிட்டு மேலே செல்வோம்.

டிஜோன் இலக்கியக் கழகத்திற்கு இரண்டாவது கட்டுரையை எழுதி அனுப்பிவிட்ட ரூசோ, பாரிஸிலிருந்து ஜெனிவாவுக்குப் புறப்பட்டுச் சென்றாரல்லவா? போகிற வழியில், ஷாம்பேரி[2] என்ற இடத்திற்குச் சென்று, அங்கு வசித்துக் கொண்டிருந்த வாரென்ஸ் சீமாட்டியைப் பார்த்தார். ஏற்கெனவே அவர். இவரைப் பிழைக்கத் தெரியாதவன் என்று கருதி அலட்சியப்படுத்தி இருந்தாள். இவருடைய சிநேகம் அவ்வளவு சிறப்புடையதல்ல என்றும் நினைத்திருந்தாள். ரூசோவுக்கு இது நன்றாகத் தெரியும். ஆயினும் தன்னை ஆதரித்தவள் என்ற ஒரே காரணத்திற்காகவும் தான் இப்பொழுது ஒரு சௌகரியமான நிலைமையில் இருப்பதனால், அவளுக்கு தன்னால் முடிந்த உதவியைச் செய்யவேண்டுமென்ற நோக்கத்துடனும் அவளைப் பார்க்கச் சென்றார். அவள், பழைய சோபையையும்

---

**1. My Confessions** **2. Chamberry**

செல்வாக்கையும் இழந்து கிடந்தாள். வறுமையும், முதுமையும் அவளை மூடிக்கொண்டு வந்தன. அவளைப் பார்த்து ரூசோ மிகவும் வருந்தினார். தன்னோடு வந்திருக்கும்படியும், அவளுக்கு வேண்டிய எல்லாச் சௌகரியங்களையும் தன் சொந்தப் பொறுப்பில் செய்து கொடுப்பதாகவும் சொன்னார். பலமுறை வேண்டிக்கொண்டார். ஆனால் அந்த வாரென்ஸ் சீமாட்டி ரூசோவின் ஆதரவில் வாழ்வது தனது கௌரவத் திற்குக் குறைவென்று கருதினாள். இவருடைய வேண்டு கோளுக்கு இசைய மறுத்துவிட்டாள். என்ன செய்வார் ரூசோ?



ஜெனிவாவிலிருந்து பாரிஸுக்கு வந்து சேர்ந்ததும், ரூசோவின் இரண்டாவது கட்டுரை நூல் வடிவமாக வெளி வந்ததல்லவா? இதற்குப் பிறகு இவருக்குப் புதிய புதிய சீமான்கள், சீமாட்டிகளுடைய நட்புக் கிடைத்தது. இவரோடு நெருங்கிப் பழகுவது தங்களுக்கு ஒரு கௌரவமென்று அவர்கள் கருதினார்கள். இவரும் அவர்களோடு நெருங்கிப் பழகினார். அப்படி பழகியவர்களுள் டி'எபினே[1] குடும்பத்தினர் ஒருவர், இவர்கள் பெரும் பணக்காரர்கள். இவர்களுக்குப் பாரிஸைச் சுற்றிப் பல பங்களாக்கள் இருந்தன. பாரிஸுக்கு அருகாமையில் மோண்ட்மோரென்ஸி[2] என்று ஓர் இடம்.. அது இயற்கைக் காட்சிகள் நிறைந்தது. அங்கு டி'எபினே தம்பதி களுக்கு ஓர் அழகிய மாளிகை இருந்தது. அது அப்பொழுது தான் புதுப்பிக்கப்பட்டு அழகுபடுத்தப் பட்டிருந்தது. ஒரு நாள் ரூசோ, எபினே சீமாட்டியுடன் அந்த இடத்தின் வழியாக உலாவச் சென்றார். அப்பொழுது அந்த மாளிகையையும் அதைச்

1. D'Epinay 2. Montmorency

சுற்றியுள்ள இயற்கைக் காட்சிகளையும் பார்த்து ஆனந்தப் பரவசமடைந்தார். அந்த ஆனந்தப் பெருக்கிலே, ரூசோ அந்த சீமாட்டியிடம் "இதுதான் என் மனதுக்குப் பிடித்த இடம்" என்று கூறினார். குறிப்பறிந்த அந்தச் சீமாட்டி, அந்த மாளிகையை ஒரு கவிஞன் வசிப்பதற்குரிய இடமாகச் சீர்திருத்தியமைத்துக் கொடுப்பதாகவும்,, அதில் சென்று வசிக்கும்படியும் வேண்டிக் கொண்டாள். ரூசோவினிடத்தில். அவ்வளவு பிரேமை அவளுக்கு. அங்கே ரூசோவை வசிக்கும்படிச் சொன்னதோ டல்லாமல் அந்தச் சீமாட்டி, "உன்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்த இடம் உன்னுடையதுதான்" என்று சொல்லி அதை இவருக்கு இலவசமாக கொடுத்தாள். ஆனால் ரூசோ இந்த நன்கொடையைச் சுலபமாக ஏற்றுக் கொண்டு விடவில்லை.

ஏனென்றால், தனக்குச் சில வாழ்க்கைச் சௌகரியங்களை ஏற்படுத்திக்கொண்டு விட்டு, தன் தாய்நாடாகிய ஜெனிவாவி லேயே போய் நிரந்தர வாசம் செய்யவேண்டும் என்பது இவர் விருப்பம். தாய்நாட்டில் இவ்வளவு சௌகரியங்களும், இத்தனை சீமான் சீமாட்டிகளுடைய ஆதரவும் அன்பும் இல்லாமலிருக்க லாம். ஆயினும் அது தன் தாய்நாடு. தான் பிறந்த பூமி. அந்நிய நாட்டிலே ஓர் அரசனாக இருப்பதைக் காட்டிலும் சொந்த நாட்டிலே ஒரு குப்பை கூட்டுவோனாக இருப்பது மேலல்லவா? இந்த மாதிரியான மனப்பான்மை உடையவர் ரூசோ.

எனவே, டி'எபினே தம்பதிகள் அந்த மாளிகையில் சென்று வசிக்குமாறு இவரை அதிகம் வற்புறுத்த வேண்டியதாயிற்று. அவர்களுடைய விசுவாசத்தையும் வேண்டுகோளையும் இவரால் மறுக்க முடியவில்லை. கடைசியில், தன்னுடைய நாற்பத்து நான்காவது வயதில் அதாவது முதன் முதலாக அந்த மாளிகையைப் பார்த்த அடுத்த ஆண்டு - 1756 ஆம் ஆண்டு

ஏப்ரல் மாதம் 9 - ஆம் தேதி அதில் சென்று குடியேறினார். அதற்கு "ஆசிரமம்" என்று பெயர் கொடுக்கப்பட்டது. அந்த "ஆசிரம"த்தில் ஒரு துறவிபோல் இருந்து தன் வாழ்நாளைக் கழித்துவிட வேண்டுமென்று ரூசோ தீர்மானித்தார். இந்த எண்ணத்தோடுதான் அங்குச் சென்று குடியேறினார். ஆனால் விதி இவரை வேறு வழியாக இழுத்துக் கொண்டுபோகக் காத்துக் கொண்டிருந்தது.

ஆசிரமத்தில் ரூசோவுடன், டி'எபினே தம்பதிகளும் இன்னும் இரண்டொரு குடும்பத்தினரும் சென்று வசித்தார்கள். சிறிது காலம் எல்லோரும் சர்வ சாதாரணமாகப் பழகி வந்தார்கள். இப்படி இருக்கையில் டி'எபினே சீமாட்டிக்கு நூல்கள் எழுத வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. ரூசோவினுடைய காற்று வீசியதோ என்னவோ தெரியவில்லை. எந்த மாதிரியான நூல்களை எழுத அவள் ஆசை கொண்டாள்? நாவல்கள்! காதல் சித்திரங்கள்! தினந்தோறும் தான் எழுதுவதை ரூசோவுக்குப் படித்துக் காட்டுவாள். அவருடைய எண்ணமென்னவென்றால் "நாம் ரூசோவுக்கு இவ்வளவு வசதிகள் செய்து கொடுத்திருக் கிறோமே, அவன் ஏன் நம்மை ஒரு பிரபல நூலாசிரியையாக்கக் கூடாது" என்பதுதான். தான் சொல்வதை எல்லாம் ரூசோ கேட்கவேண்டுமென்று எதிர்பார்த்தாள் அந்த பணக்காரச் சீமாட்டி. பணக்காரர்களுடைய மனப்பான்மையே இப்படித்தான். ஒருவனுக்கு ஓர் அற்ப சௌகரியத்தைச் செய்து கொடுத்து விட்டு, அவனைத் தங்கள் சுய நன்மைக்காக எவ்வளவு தூரம் உபயோகித்துக் கொள்ள வேண்டுமோ, அவ்வளவு தூரம் உபயோகித்துக் கொள்ளப் பார்ப்பார்கள். ரூசோ, சுய மரியாதையும் தன்னம்பிக்கையுமுள்ளவர். தனிமையிலே, இயற்கையன்னையின் திருவடிகளிலே, தன் பொழுதை

நிம்மதியாகப் போக்க வேண்டுமென்பதற்காகவே இவர் "ஆசிரம"த்திற்கு வந்தார். டி'எபினே சீமாட்டியினுடைய காதல் நாடகங்களைக் கேட்பதற்காக அல்ல. ஆயினும், பல மாதங்கள் வரை ரூசோ, இந்தத் தொந்தரவைப் பொறுமையோடு சகித்துக் கொண்டிருந்தார்.

கடைசியில் டி'எபினே சீமாட்டிக்கும் இவருக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டது. இதற்கு மற்றொரு காரணமும் உண்டு. ரூசோ, தன்னொருத்திக்கே உரியவனென்று டி'எபினே சீமாட்டி கருதினாள். வேறு சில சீமாட்டிகள் ரூசோவிடம் வந்து போவதை அவள் விரும்பவில்லை. ரூசோவின் நடவடிக்கைகளில் சந்தேகம்கொண்டாள். ரூசோவும் அவள் மீது சந்தேகங் கொண்டார். சந்தேகம் சந்தேகத்தைத்தானே உண்டு பண்ணும்? டி'எபினே சீமாட்டியும் வேறு சிலரும் சேர்ந்துகொண்டு தனக்கு விரோதமாகச் சூழ்ச்சி செய்து வருவதாக ரூசோ கருதிவிட்டார். தன் நல்ல பெயருக்கும் புகழுக்கும் களங்கம் ஏற்பட்டு விடுமென்று அஞ்சினார். இந்தச் சந்தேகம், இந்த அச்சம் இரண்டும் சேர்ந்து ரூசோவின் பிற்பாதி வாழ்க்கையை மிகவும் பரிதாபகரமாக்கி விட்டன.

டி'எபினே சீமாட்டியினுடைய ஆதரவில் இனியும் இருக்க முடியாதென்று சொல்லிவிட்டு, 1757 - ஆம் வருடம் டிசம்பர் மாதம் 15 - ஆம் தேதி மோண்ட் மோரென்ஸியிலேயே வேறோரிடத்தில் சென்று குடியேறிவிட்டார் ரூசோ. "ஆசிரம"த்தில் சுமார் இருபது மாத காலவாசந்தான்! "கடைசியில் நான் சுதந்திரம் பெற்றேன். இயற்கையினால் எனக்களிக்கப்பட்ட நேர்மையோடும் சுயேச்சையோடும் இனி நான் இருக்கலாம்" என்று கூறினார் ரூசோ, வேறிடத்தில் வந்து குடியேறின பிறகு.

ஆனால் ரூசோ ஆசிரமத்தில் வசித்துக்கொண்டிருந்த காலத்தில் உலகத்திற்கு ஒரு நன்மை ஏற்பட்டது. எப்படி என்றால் இந்தக் காலத்தில்தான் இவர் சமுதாய ஒப்பந்தம் என்ற நூலையும், எமிலி என்ற கல்வியைப் பற்றிய நூலையும் எழுதவேண்டுமென்று திட்டம் போட்டு இவைகளுக்கான சில குறிப்புகளையும் எடுத்து வைத்தார் மற்றும் இந்தக் காலத்தில் ஜூலி அல்லது புதிய ஹெலாய்ஸே என்ற ஒரு காதல் கதையை யும் எழுதினார்.

மோண்ட்மோரென்ஸியில் ரூசோ, புதிதாகக் குடியேறின இடம் இருக்கிறதே அது மகா மோசமான இடம். சிறிய, பழைய வீடு. காற்றோட்டமில்லாத அறைகள். வெளிச்சமே கிடையாது. சுவர்களிலும் தரையிலும் ஒரே ஈரம். வீட்டுக்குள் நுழைந்தாலே ஒரு துர்நாற்றம் வீசும். போதாக் குறைக்கு எலிகள் இங்கே இல்லற தர்மத்தை ஒழுங்காக நடத்தி வந்தன. ரூசோ, இந்த வீட்டில் குடியேறின சமயம், நல்ல கடுமையான குளிர்காலம். "பேனா முனையிலிருந்த மைகூட உறைந்து போய்விட்டது." என்று இவர் கூறுகிறார். இதனோடு இவருக்கு நோய் வேறு; வயிற்றுக் கோளாறு. சாதாரணமாகவே சிந்தனா சக்தியுடைய்வர்கள் அஜீரண ரோகத்தினால் அவஸ்தைப் படுவது வழக்கம். இந்தப் பாக்கியம் ரூசோவுக்கும் இருந்தது. ஆனால் இருட்டறையிலே, பனிக்கட்டியின் மத்தியிலே நோயினால் அவஸ்தைப் பட்டுக் கொண்டாவது சுதந்திரமாக இருக்கத்தான் இவர் விரும்பினாரே தவிர, கழுவப் பெறாத உணவுக் கலயங்களுக்கு மத்தியிலே, அகத்திலே அணுவளவும் அன்பில்லாத பிரபுக்களின் தயவிலே, ஒழுக்கத்தை பிறப்பித்த கடவுளிடத்திலேயே ஒப்படைத்து விட்டு உலவுகின்ற சீமாட்டிகளின் அணைப்பிலே வாழ இசைந்தாரில்லை. உலகம், இவரைப் பைத்தியக்காரன் என்று ஏன் சொல்லாது?

இந்தப் பைத்தியக்கார வாழ்வு வாழ்ந்துகொண்டிருந்த போதுதான், இந்தத் தரித்திர தசையிலேதான், இந்த அஜீரண ரோகத்தினால் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்த காலத்திலே தான், ஆம், இருட்டும் அழுக்கும் நிறைந்த இந்த வீட்டிலே இருந்து கொண்டுதான் ரூசோ, அடிமைத்தனம் என்னும் அந்த காலத்திலே ஆழ்ந்து கிடந்த ஐரோப்பிய மக்களுக்கு வெளிச்சம் போலிருந்து வழிகாட்டிய, ஐரோப்பிய ஜனசமுதாயத்தின் மீது படிந்திருந்த மாசுகளைத் துடைப்பதற்கு ஏதுவாயிருந்த 'சமுதாய ஒப்பந்தம்' என்ற நூலை எழுதினார். எமிலி என்ற கல்வியைப் பற்றிய நூலும் இங்கிருந்த போதுதான் எழுதப்பட்டது.

ரூசோ இந்த மாதிரி ஒரு துன்ப வாழ்க்கையை நடத்திக் கொண்டுவந்த போதிலும், ஒரு பிரபல எழுத்தாளன் என்ற முறையில் பலர் இவரை வந்து பார்த்துக்கொண்டு போனார்கள். மனங்கலந்து பழகிய நண்பர்கள் யாரும் இந்தக் காலத்தில் இவருக்கு இல்லை; அறிமுகமானவர்கள் அதிகமாயினர். பிரபுக்கள், நாடகாசிரியர்கள், நாவலர்கள், அரசியல்வாதிகள் முதலிய பலர் இவருடைய நட்பைப் பெறவேண்டுமென்று ஆசைப்பட்டு இந்தப் பாழடைந்துபோன வீட்டுக்கு வந்து கொண்டிருந்தனர். பிரெஞ்சு அரச குடும்பத்தினரும் வந்து கொண்டிருந்தவர்களில் சிலர்.

ரூசோ குடியிருந்த இடத்திற்கு அருகாமையில் லக்ஸம்பர்க்* தம்பதிகள் வசித்துக்கொண்டிருந்தார்கள். இவர்கள் பிரபலமான குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; பிரபு வம்சத்தினர். லக்ஸம்பர்க் பிரபு சிறந்த போர்வீரன் என்று புகழ் படைத்திருந்தான். அப்பொழுது பிரான்ஸை ஆண்டு

* Marshal and Madame de Luxembourg

கொண்டிருந்த பதினைந் தாவது லூயி மன்னனுடைய நெருங்கிய நண்பன். இப்படிப்பட்ட ஒரு பிரபுவினுடைய சிநேகம் ரூசோவுக்கு வலியக்கிடைத்தது. ஒருநாள் ரூசோ தன் வீட்டில் ஏதோ அலுவல் பார்த்துக் கொண்டிருக்கையி ல் லக்ஸம்பர்க் சீமான், தன் பரிவாரங்களுடன் திடீரென்று காட்சியளித்தான். ரூசோ திகைத்துப் போய், தன் எளிய வாழ்க்கையை ஒரு பிரபு நேரில் பார்க்க நேரிட்டு விட்டதே என்று வருத்தப்பட்டார். ஆனால் அந்த லக்ஸம்பர்க் பிரபு கொஞ்சம் இளகிய மனம் படைத்தவன். "ரூசோவைப் போன்ற ஒரு தத்துவஞானி, இந்த மாதிரி வசதியற்று வாழ்ந்து கொண்டிருப்பது பிரெஞ்சு மக்களுக்கே கேவலம்" என்று கருதி தன் மாளிகையிலேயே ஒரு தனியான இடத்தை ஒதுக்கி அதில் வந்து வசிக்கும்படி ரூசோவை வற்புறுத்தினான். ரூசோவும் இதனை மறுக்க இயலாத வராய் பிரபு மாளிகைக்கே தன் இருப்பிடத்தை மாற்றிக் கொண்டார்.

இதிலிருந்து லக்ஸம்பர்க் தம்பதிகளுக்கும் ரூசோவுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. லக்ஸம்பர்க் தம்பதிகள் மூலம் வேறு பல சீமான் சீமாட்டிகளும் ரூசோவிடம் வந்துபோக ஆரம்பித்தார்கள். அவர்கள் இவருக்கு அளித்த காணிக்கைப் பொருள்களும் பாராட்டு மொழிகளும் எண்ணிறந்தன. ஆனால் ரூசோ, இவைகளை எல்லாம் கண்டு மயங்கிப் போய் விடவில்லை. தன் வாழ்க்கை அந்தஸ்தையும் உயர்த்திக் கொள்ளவில்லை. எப்பொழுதும் போல் இவர் அக்கம் பக்கத்தி லுள்ள கிராமவாசிகளிடம் சென்று பழகிக்கொண்டிருந்தார். அவர்களுக்கு ஏதேனும் உதவி தேவையானால் உடனே சென்று செய்வார். "பணக்கார கோஷ்டியினர் எனக்குக் காட்டிய தூபதீபங்களினின்று எழுந்த புகையானது என் மண்டைக்குள்

ஏறி என் அறிவை மயக்கிவிடவில்லை" என்று இவர் ஓரிடத்தில் கூறுகிறார். இன்னோரிடத்தில் சொல்கிறார்: "பெரிய மனிதர்களென்று சொல்லப்படுகிறார்களே அவர்களை நான் வெறுக்கிறேன். அவர்களுடைய ஆடம்பரம், கல் நெஞ்சம், விருப்பு வெறுப்புக்கள், அற்பத்தனம், மற்ற துர்க்குணங்கள் ஆகிய எல்லாவற்றையுமே வெறுக்கிறேன். அவர்களை நான் அதிக கேவலமாகக் கருதாமலிருந்தால் அவர்கள் மீது இன்னும் குறைவாகத் துவேஷம் பாராட்டியிருப்பேன். இந்த மனப் பான்மையுடன்தான்நான் மோண்ட்மோரென்ஸி மாளிகையில் சென்று வசித்தேன். அந்த மாளிகையின் சொந்தக்காரர்களைப் பார்த்தேன். அவர்களிடம் நேசங் கொண்டேன். ஆம், அவர்களை நேசித்தேன். என் உயிருள்ள வரையில் முழு மனத்துடன், முழு பலத்துடன் அவர்களை நேசிப்பேன். அவர்களுக்காக நான் என் உயிரைக் கொடுப்பேன் என்று சொல்ல மாட்டேன். ஏனென்றால் என்னுடைய தற்போதைய நிலையில் அது மிகவும் அற்பமான கொடையாகும். ஆனால் மனப்பூர்வமாக நான் எதை விரும்புகிறேனோ அதை அதாவது வருங்கால சந்ததியாரிடமிருந்து நான் எதிர்பார்க்கிற நன் மதிப்பைக் கொடுப்பேன். எதிர்கால சந்ததியர் எனக்கு நிச்சயம் நன்மதிப்புக் கொடுப்பர். அவர்கள் கொடுக்கத்தான் வேண்டும். ஏனென்றால் அந்த நன்மதிப்பைப் பெற நான் உரியவன். வருங்காலத்தார் எப்பொழுதுமே நிகழ்காலத்தைப், பற்றி நியாயமாக நடந்துகொள்வார்களாதலால், எனக்குரிய மதிப்பை என்றும் அளிப்பர் என்பது நிச்சயம்." என்பது அவர் வெளியிட்ட கருத்து.

லக்ஸம்பர்க் தம்பதிகளும் ரூசோவை முழு மனதுடன் நேசித்து இவருக்கு வேண்டிய எல்லாச் சௌகரியங்களையும்

செய்துதான் கொடுத்தார்கள். இப்படி இரு சார்பினரும் பரஸ்பர நட்புடன் நடந்து கொண்ட போதிலும், ரூசோ எப்பொழுதுமே தன் சுயமரியாதையை இழந்துவிடுகிற மாதிரி நடந்து கொண்டது கிடையாது. பணக்காரர்கள் முன்னிலையில் பல்லிளிக்கவோ, இறந்துபோன ஜீவகளையை உயிர்ப்பித்து முகத்திலே கொண்டு வந்து காட்டவோ இவருக்குத் தெரியாது. லக்ஸம்பர்க் தம்பதிகள் இவரை நேரில் சாப்பிடக் கூப்பிட்டாலொழிய அவர்களுடன் சென்று சாப்பிட மாட்டார். ஒரு சமயம் தெரியாத்தனமாகவோ அல்லது வேறு வேலைகள் காரணமாகவோ இவரைச் சாப்பாட்டுக்கு வரும்படி ஒரு வேலைக்காரன் மூலம் சொல்லி அனுப்பினார்கள். போகவே இல்லை ரூசோ. காத்துப் பார்த்தார்கள் லக்ஸம்பர்க் தம்பதிகள். காரணத்தைத் தெரிந்து கொண்டார்கள். மறுநாள் ரூசோவிடம் சென்று மன்னிப்புக் கேட்டுக்கொண்டு கூடவே சாப்பாட்டிற்கு அழைத்துப் போனார்கள். இதொரு சிறிய விஷயந்தான். ஆனால் ரூசோ இதில் தன்மானத் தன்மையோடு பிரகாசிக்கிறாரில்லையா?

லக்ஸம்பர்க் தம்பதிகளின் ஆதரவில் வசித்துக் கொண்டிருந்தபோதுதான், இவருடைய ஜுலி[1] என்ற காதல் கதையும், எமிலி[2] என்ற கல்வியைப் பற்றிய நூலும், சமுதாய ஒப்பந்தம்[3] என்ற அரசியல் நூலும் வெளியாயின. இவற்றின் வெளியீட்டுக்கு லக்ஸம்பர்க் சீமாட்டி பெரிதும் துணை செய்தாள்*

---

**நூல்கள் வெளியான தேதி விவரம்**

| | |
|---|---|
| 1. ஜுலி | : பிப்ரவரி, 1761 |
| 2. எமிலி | : மே, 1762 |
| 3. சமுதாய ஒப்பந்தம் | : மே, 1762 |



# 7. கல்வியைப் பற்றிய அரிய நூல்

'எமிலி' என்ற நூலில், சிறுவர் சிறுமியர்களுக்கு எத்தகைய கல்வி போதிக்கப்பட வேண்டுமென்பதைப்பற்றித் தெளிவாக எழுதியிருக்கிறார் ரூசோ. இவருடைய காலத்தில் போதிக்கப் பட்டு வந்த கல்வியானது ஜனங்களை மனித நிலைக்குக் கொண்டுபோகாமலிருப்பதைப் பார்த்து மனம் புழுங்கிப்போய்த் தான் இவர் இந்த நூலை எழுதினார். இதனைக் கையெழுத்துப் பிரதியாக உருவகப்படுத்துவதற்கு மட்டும் இவருக்கு மூன்று வருடங்கள் பிடித்தன. கல்வியைப்பற்றிப் பொதுவாக ரூசோ கொண்டுள்ள அடிப்படையான சில கருத்துக்களைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு, அந்த நூலிலிருந்து சில பகுதிகளை மூன்றாவது அனுபந்தத்தில் சுருக்கித் தந்திருக்கிறோம்.

எமிலி வெளியானபோது ரூசோவுக்கு வயது ஐம்பது. தனது அநுபவங்களை எல்லாம் திரட்டியே இதில் கொடுத்திருக்கிறார். அப்படித் திரட்டிக் கொடுப்பதற்கான அநுபவமும் தகுதியும் இவருக்கு இருந்திருக்கின்றன என்பதைமட்டும் நாம் இங்கு ஒப்புக்கொள்ள வேண்டும்.



எமிலி பிற்காலத்திலே, அதாவது பத்தொன்பதாவது நூற்றாண்டிலே, ஐரோப்பாவில் வகுக்கப்பட்ட பல கல்வித் திட்டங்களுக்கெல்லாம் அஸ்திவாரமாயிருந்தது. அநேக நாட்டு அரசாங்கங்கள், இதில் கூறப்பட்டுள்ள கல்வி முறையை ஏறக்குறைய அப்படியே பின்பற்றின. கல்வியைப்பற்றிப் பிற்காலத்திலேயே எழுதியுள்ள பல அறிஞர்களும் இவருடைய நூலிலிருந்து அநேக கருத்துக்களை எடுத்துக் கையாண்டிருக் கின்றனர். ருஷ்ய அறிஞனாகிய டால்ஸ்டாய்,* இந்த எமிலியில் கூறப்பட்டுள்ள திட்டப்படியே தன் குழந்தைகளுக்குக் கல்வி போதிக்க ஏற்பாடு செய்தான் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

பிற்காலத்தில் இந்த நூல் இவ்வளவு பிரபலமடைந்த போதிலும் இது வெளியான காலத்தில் இதன் ஆசிரியனான ரூசோவின்மீது அறிஞர்கள் எவ்வளவோ பொறாமைப் பட்டார்கள், சம்பிரதாயத்திலே தோய்ந்து கிடந்த சமுதாயமானது இவரை எவ்வளவோ துன்புறுத்தியது - கடவுளுக்கும் மனிதர் களுக்கும் மத்தியில் தரகர்களாயிருந்து கொண்டு பொருள் சம்பாதித்த புரோகிதர்கள், இந்த எமிலியில் கூறப்பட்ட புதிய கருத்துக்களைக் கண்டு நடுங்கிப் போனார்கள். இவரைப் பழிதீர்க்க வேண்டுமென்று எவ்வளவோ பாடுபட்டார்கள்.

எமிலி வெளியான இரண்டாவது வாரம் பிரெஞ்சு பார்லி மெண்ட், பாரிஸில் கூடி இந்த நூலைப் பகிரங்கமாக எரிக்க வேண்டுமென்றும், இதனை யாரும் படிக்கவிடக் கூடாதென்றும், இதன் ஆசிரியனான ரூசோவை உடனே கைது செய்ய வேண்டும் என்றும் உத்தரவு போட்டது. இதன்படி 1762-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 11ஆம் தேதி அதாவது புத்தகம்

* **Leo Tolstoy 1828 - 1910**

வெளியான இருபத்தோராவது நாள் பாரிஸிலுள்ள நீதி மன்றத்திற்கு முன்னால் எமிலி பகிரங்கமாகத் தீயிட்டுக் கொளுத்தப்பட்டது.

லக்ஸம்பர்க் தம்பதிகள், பிரெஞ்சு பார்லிமெண்ட் உத்தரவை ரூசோவுக்கு உடனே தெரிவித்து, பிரெஞ்சு எல்லையிலிருந்து வேறெங்கேனும் சென்று விடும்படி யோசனை கூறினார்கள். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்தார்கள். அப்படியே ரூசோ என்றைய தினம் பாரிஸில் எமிலி எரிக்கப்பட்டதோ அன்றைய தினம் 1762 - ஆம் ஆண்டு ஜூன் மாதம் 11 ஆம் தேதி லக்ஸம்பர்க் தம்பதிகள் முதலிய எல்லாரிடமும் விடை பெற்றுக்கொண்டு விடியற்காலை நான்கு மணிக்கு அரசாங்க அதிகாரிகள் எவருக்கும் தெரியாமல் மோண்ட்மோரென்ஸியைவிட்டு வெளியேறி விட்டார். மறுநாள் காலை ஸ்விட்சர்லாந்து எல்லையை மிதித்தார். கீழே குனிந்தார். மண்ணை முத்தமிட்டார். "என் சுதந்திர நாடே! அடைக்கலம்" என்று கதறினார். கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது.

ஆனால் 'சுதந்திர ஸ்விட்சர்லாந்து' இவரைச் சும்மா விடவில்லை. பாரிஸைப் பின்பற்றி ஸ்விட்சர்லாந்திலுள்ள ஜெனிவா, பெர்ன், நியூஷாடெல் முதலிய ஊர்களும் எமிலியைத் தீயிட்டுக் கொளுத்தின. தங்கள் தங்கள் நகர எல்லைக்குள் ரூசோ வரக்கூடாதென்று தடை உத்தரவும் விதித்தன. ரூசோவை பைத்தியக்காரன் என்று சொன்னார்கள், "ஐரோப்பா முழுவதிலும் எனக்கு விரோதமான ஒரு சாபக்குரல் எழுந்தது. எவ்வளவு ஆக்ரோஷத்துடன் அது எழுந்தது தெரியுமா? இதற்குமுன் எப்பொழுதுமே இந்த மாதிரி உண்டானது கிடையாது. என்னை ஒரு மதத் துவேஷியாக, நாஸ்திகனாக, பைத்தியக்காரனாக, காட்டு மிருகமாக, ஓநாயாகக் கருதி விட்டார்கள் ஜனங்கள்.

என்னை வேட்டையாடித் தீர்த்து விட வேண்டுமென்று உலகத்திற்கு ஓர் ஆசை தோன்றி விட்டாற் போலிருக்கிறது" என்று புண்பட்ட மனத்தோடு கூறுகிறார் ரூசோ.

கடைசியில் பாய் டி லா டூர்[1] என்ற ஒரு சீமாட்டியினுடைய ஆதரவின் பேரில் ப்ருஷ்யா தேசத்தின் எல்லையிலுள்ள மோட்டியர்ஸ்[2] என்ற ஊரை அடைந்து அங்கே ஒரு சிறிய வீட்டில் குடியேறினார். சுமார் முப்பத்தெட்டு மாத காலம் இந்த வீட்டிலே வாசம் செய்துகொண்டிருந்தார். இங்கே பல பேருடைய நட்பு இவருக்குக் கிடைத்தது. எந்தெந்த ஊர்களில் இவருடைய நூல் நெருப்புக்கிரையாயிற்றோ அந்தந்த ஊர்களிலிருந்தே அநேகர் வந்து இவரைக் கண்டு பேசிப் போனார்கள். அவர்களுடைய ஆதரவும் அன்பும் இவருக்குக் கிடைத்தன. இப்படி வந்து இவருக்கு மரியாதை செலுத்தி விட்டுப் போனவர்களில் ஜேம்ஸ் பாஸ்வெல்[3] என்பவரும் ஒருவர். இவர் ஆங்கிலப் பேரறிஞராகிய ஸாமியல் ஜான்சன்[4] என்பவருடன் கூடவே இருந்து பழகியவர். அவரைப் பற்றி ரசமான ஒரு நூலும் எழுதியிருக்கிறார். இப்படிப்பட்டவர் ரூசோவை மோட்டியர்ஸில் வந்து பார்த்து தன் வாழ்வைப் பண்படுத்திக் கொள்வதற்கான பல யோசனைகளை இவரிட மிருந்து கேட்டுக் கொண்டு போனார்.

மோட்டியர்ஸ் இயற்கை வளம் நிறைந்த ஒரு கிராமம். ரூசோ இங்குப் பலவாறு சுற்றித் திரிந்தார். செடி கொடிகளைப் பற்றி தான் கொண்டிருந்த அறிவை விருத்திசெய்து கொண்டார். உணவு விஷயத்திலும் உடை விஷயத்திலும் ஒவ்வொரு

---

**1. Boy de la Tour 2. Motiers**

**3. James Boswell 1740 - 1795 4. Samuel Johnson 1709 - 1784**

மனிதனுக்கும் பரிபூர்ண சுதந்திரம் இருக்க வேண்டும் என்ற கருத்தைத் தன் சொந்த விஷயத்தில் பின்பற்றிக் கொண்டு வந்தார். ஓர் அர்மீனியனைப் போல் உடை உடுத்திக் கொண்டார். இந்த உடை மாற்றத்திற்குத் தகுந்தாற் போலவே பேச்சு வார்த்தைகளைக்கூட மாற்றிக் கொண்டார். அர்மீனிய சம்பிரதாயப்படி, யாரையாவது நண்பர்களை முதன் முதலாகச் சந்திக்கிறபோது 'ஸலாம் அலைகும்' என்றே சொல்வார். கற்பனை உலகத்திலே வாழ்கிறவர்கள், இந்த மண்ணுலகத்தைப் பொறுத்த மட்டில் விநோத புருஷர்களாகவே இருக்கிறார்கள்!



# 8. இறுதிக் காலம்

ரூசோவை "இரண்டு புரட்சிகளுக்கு விதை போட்டவர்" என்று சொல்வதுண்டு. ஒன்று அமெரிக்கப் புரட்சி; மற்றொன்று பிரெஞ்சுப் புரட்சி. 1776 - ஆம் வருடம் ஜூலை மாதம் 4 ஆம் தேதி, அமெரிக்கா - அதாவது இன்று அமெரிக்க ஐக்கிய நாடுகள் என்று எந்த நாட்டை அழைக்கிறோமோ அது - இங்கிலாந்தினின்று பிரிந்து சுதந்திரக் கொடி நாட்டியது. அப்பொழுது அது தன் சுதந்திரப் பிரகடனத்தை வெளியிட்டது. அந்தப் பிரகடனத்தில் பின் வரும் வாசகங்கள் பொறிக்கப்பட்டிருந்தன:

*"எல்லா மனிதர்களும் பிறக்கிறபோது சமமாகவே பிறக்கிறார்கள். அப்படிப் பிறக்கிற போதே சிருஷ்டி கர்த்தரான கடவுள், அவர்களுக்கு, பிறரிடம் தொடர்பு படுத்த முடியாத உரிமைகளை அளிக்கிறார். இந்த உரிமைகளில், உயிர் வாழ்தல், சுதந்திரமாயிருத்தல், சந்தோஷகரமான வாழ்க்கையை நாடிச் செல்லுதல் ஆகியவை சேர்ந்திருக்கின்றன."*

இங்ஙனமே, பிரெஞ்சுப் புரட்சியின் போது - 1789 - ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 4ஆம் தேதி - பிரெஞ்சு தேசீய சபை

கூடி, மனித உரிமைகளைப் பற்றிய சாஸனத்தை வெளியிட்டது. அதன் முதல் மூன்று பிரிவுகள் வருமாறு:

1. *மனிதர்கள் பிறக்கிறபோது உரிமையோடும் சமமாகவும் பிறக்கிறார்கள். அப்படியே உரிமையோடும் சமமாகவும் தொடர்ந்து வாழ்கிறார்கள். ஆதலால் அவரவர்களுடைய உபயோகத்தைப் பொறுத்தே சமுதாயத்தில் வேற்றுமைகள் இருக்கலாம்.*

2. *மனிதனுடைய இந்த இயற்கையானதும் மாற்ற முடியாததுமான உரிமைகளைக் காப்பாற்றுவதுதான் எல்லா அரசியல் சேர்க்கைகளின் நோக்கமாகும். சுதந்திரம், சொத்து, பாதுகாப்பு, அடக்குமுறையை எதிர்த்து நிற்றல் ஆகிய இவையே இயற்கையான உரிமைகளாகும்.*

3. *அரசுக்கு மூல காரணமாக இருப்பது ஜனசக்தியே. இந்த ஜனசக்தியிலிருந்து தெளிவாகப் பிறவாத எந்தவிதமான அதிகாரத்தையும், எந்த தனிப்பட்ட மனிதரோ, அல்லது தனிப்பட்ட மனிதர்களடங்கிய ஒரு சங்கமோ பிரயோகஞ் செய்யக் கூடாது.*

இந்த சுதந்திரப் பிரகடனங்களில் காணப்படுகிற மேற்கண்ட வாசகங்கள். ரூசோ எழுதிய சமுதாய ஒப்பந்தத்திலிருந்து எடுக்கப்பட்டவை. இதனாலேயே "இரண்டு புரட்சிகளுக்கு விதை போட்டவர்" என்று இவர் அழைக்கப் படுகிறார்.

எமிலி எந்தச் சமயத்தில் வெளியாயிற்றோ ஏறக்குறைய அதே சமயத்தில்தான் சமுதாய ஒப்பந்தமும் வெளியாயிற்று. இது வெளியானதும், ஐரோப்பிய ஜன சமுதாயத்தில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. "உலக சரித்திரத்திலேயே ஓரிரண்டு நூல்களைத் தவிர, ரூசோவின் சமுதாய ஒப்பந்தத்தைப்போல் வேறெந்த

நூலும் ஜனங்களின் இருதயத்தில் ஆதிக்கஞ் செலுத்தவில்லை" இதன் ஆரம்ப வாசகமே எவ்வளவு கம்பீரமாக இருக்கிறது பாருங்கள் : "மனிதன் சுதந்திரமுள்ளவனாகவே பிறக்கிறான்; ஆனால் பிறகு அவன் எங்கும் கட்டுண்டு கிடக்கிறான்." இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த இந்த நூலில் அடங்கியுள்ள சில கருத்துக்களைச் சுருக்கமாக நான்காவது அனுபந்தத்தில் எடுத்துக் காட்டியுள்ளோம்.

சமுதாய ஒப்பந்தம் வெளியானதும், அது, எமிலியைப் போன்ற கதியையே அடைந்தது. எந்த ஜெனிவாவை ரூசோ தன் மனப்பூர்வமாக நேசித்தாரோ அந்த ஜெனிவாவே, இந்தச் சமுதாய ஒப்பந்தத்தை எரித்ததென்று சொன்னால் அதனை இவரால் தாங்க முடியுமா? தவிர இவரைப் பகிஷ்கரித்தும் விட்டது அது. இதனால் ரூசோ, ஜெனிவாவின் பிரஜா உரிமையை நிராகரித்துவிட்டார். தன் விஷயத்தில் இழைக்கப் பட்ட அநீதியைக் கண்டித்தும் அதன் செயலை ஆதரித்து வந்த பிரபுக்களை எதிர்த்தும் அநேக கடிதங்கள் எழுதினார். காரசாரமான இந்தக் கடிதங்கள் மலைக் கடிதங்கள்* என்ற பெயருடன் 1764 - ஆம் ஆண்டு அதாவது ரூசோவின் ஐம்பத்திரண்டாவது வயதில் - நூல் வடிவமாக வெளியாயிற்று. இது இன்னும் அதிகமான விரோதிகளை இவருக்குச் சம்பாதித்துக் கொடுத்தது.

ரூசோ, மோட்டியர்ஸில் இருந்த காலத்தில் லக்ஸம்பர்க் சீமானும் வாரென்ஸ் சீமாட்டியும் இறந்து போனதாகச் செய்தி கிடைத்தது. இது இவருக்கு இன்னும் அதிகமான துயரத்தை உண்டு பண்ணி விட்டது. தனக்கு ஆறுதல் சொல்வார் எவரு

---

* **Letters from the Mountain**

மில்லை என்பதையும், தன் தனிமையையும் இன்னும் அதிகமாக உணர்ந்தார். தவிர, இந்தச் சமயத்தில், இவருடைய நூல்களில் சொல்லப்பட்டிருந்த சில வாக்கியங்களைத் தனித்தனியாகப் பிய்த்தெடுத்து அவைகளை ஆதாரமாக வைத்துக்கொண்டு இவரைத் தாக்கினர் சிலர். இவருக்கு எதிர்ப்புக் காட்டுகிற முறையில் அநேக நூல்கள் வெளியாகத் தலைப்பட்டன. இவருடைய சமகாலத்தவரும் பிரெஞ்சுப் புரட்சிக்குக் காரணர்களென்று கருதப்படுகிற இருவர்களுள்[1] ஒருவருமான வால்ட்டேர்[2] இவரைப் பகிரங்கமாகத் தாக்க ஆரம்பித்தார்.

இருவரும் சமுதாய ஊழல்களைக் களையவேண்டுமென்கிற ஒரே லட்சியமுடையவர்களாயிருந்தபோதிலும், ஆரம்பத்திலிருந்தே இருவருக்குமிடையில் பரஸ்பரப் பொறாமையும், பகைமையும் நிலவியிருந்தன. வால்ட்டேர், பணக்காரர்களோடு கை குலுக்கிக் கொண்டிருப்பதை ரூசோ விரும்பவில்லை; ரூசோ ஏழைகளுக்கு மத்தியில் உழன்று கொண்டிருப்பதை வால்ட்டேர் விரும்பவில்லை. ஆனால் நடு நிலைமையோடு பார்க்கிறபோது ஆரம்பத்தில் சிறிது காலம் வரையிலாவது வால்ட்டேரை, ரூசோ மதிப்புடனேயே பேசி வந்திருக்கிறார். வால்ட்டேர்தான் ரூசோவைப் பரிகாச தோரணையிலே நடத்தி வந்திருக்கிறார். 1755 - ஆம் ஆண்டு நவம்பர் மாதம், போர்த்துகல் தேசத்திலுள்ள லிஸ்பன் நகரத்தில் பெரிய பூகம்பம் உண்டாயிற்று. ஆயிரக்கணக்கான பேர் மாண்டு போயினர். இது கடவுளின் திருவுளத்திற்குச் சம்மதமோ என்கிற மாதிரியான கருத்துக்களைப் புகுத்தி வால்ட்டேர் 1756 - ஆம் ஆண்டு ஒரு கவிதை இயற்றி வெளியிட்டார். இதனைத் தாக்கி

---

1. ரூசோவும் வால்ட்டேரும் 2. Voltaire 1694 - 1778

எழுதினார் ரூசோ. இதிலிருந்து இருவரும் அதிகமாகத் துவேஷிக்கத் தலைப்பட்டனர். இதொரு வருந்தத்தக்க சம்பவம்.

ஒரு சமுதாயத்தின் சிந்தனா சக்தியைத் தூண்டி விட்ட மகான்கள் என்று யாராரை நாம் போற்றி வருகிறோமோ அவர்களுடைய சொந்த வாழ்க்கையைச் சிறிது உள்புகுந்து பார்த்தோமானால், பொறாமைத்தீ என்பது அணையாம லிருந்துகொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இவர்களிற் பலர் ஒரே காலத்தில், ஒரே நாட்டில், ஒரே லட்சியத்திற்காகப் பாடுபடுகிறார் கள். ஆனால் ஒருவருக்கொருவர் பகைத்துக்கொண்டே வாழ்ந்து வருகிறார்கள். என்ன ஆச்சரியம்! ரூசோவுக்கும் வால்ட்டேருக் கும் பகைமை! இத்தாலியின் மேன்மைக்காக ஒரே காலத்தில் பாடுபட்ட மாஜினி, காரிபால்டி, காவர் ஆகிய மூவருக்குள்ளும் பகைமை!

பலரும் பலமுகங்களிலிருந்து தாக்கத்தொடங்கி விட்டதைக் கண்டு ரூசோவின் உள்ளம் கலங்கிவிட்டது. தன்னைச் சுற்றிச் சூழ்ச்சிகள் நடைபெறுவதாக மிரண்டுபோய் விட்டார்; எல்லோரையும் தன் எதிரிகளாகக் கருதிவிட்டார். போதாக்குறைக்கு இவருடைய எளிய தன்மையைக் கண்டும், இவருடைய எதிரிகள் சிலருடைய போதனையினாலும் இவரை, மோட்டியர்ஸ் வாசிகள் அடிக்கடி பரிகசிக்கத் தொடங்கினார்கள். இவர் வசித்துக் கொண்டிருந்த வீட்டிலே கல்லெறிந்து வேடிக்கை பார்த்தார்கள். சுருக்கமாகச் சொல்லப் போனால் இவரை ஒரு பைத்தியக்காரனாகக் கருதி நடத்தினார்கள்.

இனி, மோட்டியர்ஸில் இருக்கக்கூடாதென்று ரூசோ தீர்மானித்துவிட்டார். சில நண்பர்களுடைய உதவியின்பேரில்

அருகாமையிலிருந்த செயிண்ட் பீரே[1] என்ற இயற்கையழகு நிரம்பிய ஒரு தீவில் சென்று வசித்தார். இங்குச் சுமார் ஆறு வார காலம் மன நிம்மதியுடன் தங்கினார். "மனோ ரம்மியமான இந்த இடத்திலேயே என் வாழ் நாளை முடித்துவிடத் தீர்மானித்தேன். ஆனால் என் நண்பர்கள் என்னை இங்கு நிம்மதியாக விட்டு வைப்பார்களா என்ற பயம் மட்டும் எனக்கிருந்தது. ஏறக்குறைய இரண்டு மாதகாலந்தான் இந்தத் தீவில் நான் கழித்தேன். சுயேச்சையாக என்னை விட்டிருந்தால் இங்கே இரண்டு வருடமல்ல. இரண்டு நூற்றாண்டுகள்கூட, சாசுவதமாகவே வசித்துக்கொண்டிருப்பேன். ஒரு கணங்கூட எனக்குச் சலிப்புத் தட்டியிராது... இந்தக் காலத்தில் உலக நன்மைக்காக எந்த நூலையும் எழுத எனக்கு உத்தேசமில்லை. ஆனால் என் சொந்த சந்தோஷத்திற்காக, ஐரோப்பாவிலுள்ள செடி கொடிகளை எல்லாம் பற்றி விஸ்தரித்து, தாவர நூலொன்று எழுதவேண்டு மென்று ஆசைப்பட்டிருந்தேன். ஆசைப் பட்டேனே தவிர என் எண்ணம் நிறைவேறவில்லை. இங்கே நான் கழித்த இரண்டுமாத காலமுந்தான், என் வாழ்க்கையிலேயே மிகவும் சந்தோஷகர மான பாகம்." என்று இந்தக் காலத்தை வருணிக்கிறார் ரூசோ.

ரூசோ பயந்தபடி, இந்த இடத்திலே நிம்மதியாக விட்டு வைக்க விரும்பவில்லை இவருடைய அரசியல் விரோதிகள். "இந்தத் தீவிலே இனி இவன் வசிக்கக்கூடாது" என்று பெர்ன் நகரசபை (இந்த நகரசபை எல்லைக்குள்தான் செயிண்ட் பீரே தீவிருந்தது) தடை உத்தரவு போட்டுவிட்டது. இனி - என்ன செய்வது? எங்கே போவது? ஏற்கெனவே டேவிட் ஹ்யூம்[2] என்பவர், இங்கிலாந்திலே வந்து தங்கியிருக்கும்படி அழைப்பு அனுப்பியிருந்தார். ஹ்யூம், பிரசித்தி பெற்ற ஒரு தத்துவஞானி;

1. Saint Pierre Island 2. David Hume 1711 - 1776

சரித்திராசிரியர்; ரூசோவின் எழுத்து வன்மையில் ஈர்க்கப் பட்டவர். இதன் காரணமாக இருவருக்கும் கடிதப் போக்குவரத்து நடந்துகொண்டிருந்தது. ரூசோவின் பரிதாப நிலைமையைக் கேள்வியுற்று ஹ்யூம், எப்படியாவது இங்கிலாந்துக்கு வந்து விடவேண்டுமென்றும், தான் எல்லாச் சௌகரியங்களையும் செய்துகொடுப்பதாகவும் எழுதியிருந்தார். இந்த அழைப்பை ஏற்றுக் கொண்டு இங்கிலாந்துக்குச் செல்லுமாறு நண்பர்கள் ரூசோவை வற்புறுத்தினார்கள். அப்படியே ரூசோ பாரிஸ் வழியாக இங்கிலாந்திற்குச் சென்றார்.

பாரிஸில் தங்கியிருந்த ஓரிரண்டு நாட்களும் இவருக்கு ராஜோபசாரங்கள் நடைபெற்றன. ரூசோவை ஒருமுறை கண்ணால் பார்த்துவிட வேண்டுமென்று எத்தனையோ பேர் வந்து பார்த்துப் போனார்கள். இவரை அழைத்துக் கொண்டு போக டேவிட் ஹ்யூமே நேரில் பாரிஸுக்கு வந்திருந்தார்.

இருவரும் 1766 – ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 13 – ஆம் தேதி லண்டன் அடைந்தனர். அப்போது ரூசோவுக்கு வயது ஐம்பத்துநான்கு. சிறிது காலங்கழித்து தெரேஸேயும் வந்து சேர்ந்து கொண்டாள்.

ரூசோ லண்டனுக்கு வந்திருக்கிறார் என்பதைக் கேள்வி யுற்ற ஆங்கில அறிஞர்கள் பலர் சந்தோஷப்பட்டனர். பத்திரிகைகள் இவர் வரவைப் பற்றி விஸ்தரித்து எழுதின. அரச பரம்பரை உள்ளிட்ட பிரபலஸ்தர்கள் பலர் சென்று இவரைப் பார்த்துப் பேசினர்; வியந்து பாராட்டினர். ஆனால் ஒருசிலர் இவரைத் தாக்க ஆரம்பித்தார்கள். அவர்களில் முக்கியமானவர் எட்மண்ட் பர்க்[1]கும் ஸாமியல் ஜான்ஸனுமாவார்கள். ஜான்ஸன்,

---

1. **Edmund Burke 1729 - 1797.** பிரபல பிரிட்டிஷ் ராஜதந்திரி

ரூசோ மீது கொண்ட பொறாமையின் காரணமாகவோ என்னவோ இழிவாகவே பேசி வந்தான். "மனிதர்களிலே மிகக் கேவலமானவன் இந்த ரூசோ. இவன் ஒரு போக்கிரி. இவனைச் சமுதாயத்திலிருந்து விரட்டியடிக்க வேண்டும். மூன்று நான்கு தேசத்தினர் இவனை நாடு கடத்தி விட்டனர். இப்படிப்பட்டவ ன் நம் நாட்டில் பாதுகாப்புப் பெறுவது நமக்குப் பெரிய அவமானம்'' என்று ஜான்ஸன் கூறுகிறான் ஓரிடத்தில். படித்த அறிஞர்களின் மனப்பான்மையைப் பார்த்தீர்களா?

டேவிட் ஹ்யூமினுடைய முயற்சியின்பேரில் ஸ்டாபோர்ட் ஷைரிலுள்ள வூட்டன்[2] என்ற ஊரில் ரூசோ தன் துணைவியாகிய தெரேஸேயுடன் ஒரு சிறு வீட்டில் வசிக்கத் தொடங்கினார். ஆனால் துரதிருஷ்ட வசமாக ஹ்யூமுக்கும் ரூசோவுக்கும் பெரிய மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டது. கொலை செய்துவிடவே ஹ்யூம், தன்னை இங்கிலாந்திற்கு அழைத்து வந்திருப்பதாகக் கருதி விட்டார் ரூசோ. இதற்கு இவருடைய சித்தப் பிரமைதான் காரணமென்று சிலர் சொன்னார்கள். இவருக்கும் ஹ்யூமுக்கும் சமரஸம் செய்துவைக்கச் சில நண்பர்கள் முயற்சி செய்தார்கள். பலனில்லை. மனஸ்தாபம் முற்றிவிட்டது. இருவரும் தங்கள் தங்கள் பேனா முனைகளின் மூலம் தாக்கிக்கொண்டார்கள். இப்படி அறிஞர்கள் பரஸ்பரம் தாக்கிக்கொள்வது ஆங்கில இலக்கிய உலகில் பெரிய அதிர்ச்சியை உண்டு பண்ணிவிட்டது. கடைசியில் ரூசோ தனது உயிருக்கு ஆபத்து ஏற்பட்டுவிடும் என்ற பிரமை பிடித்தவராய் 1767 – ஆம் ஆண்டு மே மாதம் கடைசி வாரத்தில் பிரான்ஸ் வந்து சேர்ந்தார். சுமார் பதினைந்து மாத காலத்தோடு இவருடைய இங்கிலாந்து வாழ்வு முடிந்தது.

---

2. Wootton in Staffordshire

பிரான்ஸிற்கு வந்த பிறகு, சுமார் பத்து வருட காலத்திற்கு மேலாக பாரிஸ்மாநகரில் தெரேஸே சகிதம் வசித்துக் கொண்டிருந்தார். இந்தக் காலத்தில், சம்பாஷனைகள் என்ற நூலையும், சிந்தனைகள் என்ற நூலையும் எழுதினார். சம்பாஷணைகள் என்ற நூலில், தான் ஒரு நிரபராதி என்று நிரூபித்துக் காட்டுகிறார். ஏனென்றால், தன்னைச் சுற்றி ஒரு பெரிய சூழ்ச்சி நடைபெறுவதாக இவர் மருண்டுகிடந்தார். இதற்கேற்றாற்போல் இவருக்கு ஆதரவு அளித்துவந்த பழைய நண்பர்கள், ஒருவர்பின் ஒருவராகப் பின்வாங்கிக்கொள்ள ஆரம்பித்தார்கள். யாரைப் பார்த்தாலும் ஒரு சந்தேகம், ஒரு வெறுப்பு ஏற்பட்டுவிட்டது இவருக்கு. "யோக்கியப் பொறுப்பும் நாணயமுமுடைய ஒரு மனிதனை நான் தேடித்தேடிப் பார்க்கிறேன்; விளக்கெடுத்துக்கொண்டு மூலை முடுக்குக ளெல்லாம் தேடிப் பார்க்கிறேன். ஒரு மனிதனை, ஒரு மனித ஆத்மாவைக்கூடக் காணமுடியவில்லை. நண்பர்களென்று சொல்லிக்கொண்டு அருகே வந்து என்னைத் தடவிக் கொடுக்கிறார்கள். ஆனால் மனதிற்குள் என்னைத் திட்டிக் கொண்டே இருக்கிறார்கள். அவர்களுடைய இருதயத்திலே ஒளிந்துகொண்டிருக்கும் துவேஷத்தை நான் நன்றாகப் பார்க்கிறேன். குற்றத்தை மன்னித்துவிடலாம்; ஆனால் துரோகத்தை மன்னிக்க முடியுமா? பட்சிகளைப் பிடிக்க வேண்டுமானால் அவைகளுக்கு ஆசை வார்த்தைகள் சொல்லி அருகே அழைப்பார்கள். அதைப்போல் என்னை ஏமாற்றக் கருதி, என்னருகே வந்து என்னைப் போற்றிப் பேசுகிறார்கள் சிலர். அவர்கள் என்னைப் பகிரங்கமாகத் தாக்கினார்களானால், அதற்காக அவர்களைப் பாராட்டுவேன். அல்லது அவர்களுக் காக இரக்கப்பட்டிருப்பேன். ஆனால் அப்படி இல்லையே.

இதனால் என் புத்திக்கெட்டாத ஒரு தலைமுறையில் நான் வசிக்கிறேன் என்றுதான் முடிவுகட்ட வேண்டியிருக்கிறது" இப்படி தன் நிகழ்கால மனோ நிலைமையை வருணிக்கிறார் ஓரிடத்தில்.

சிந்தனைகள் என்ற நூலில், சில இயற்கை வருணனை களும், விரக்தி பாவனையில் சொல்லப்பட்ட சில கருத்துக்களும் இருக்கின்றன.

"என்னைப் பொறுத்தமட்டில் எல்லாம் முடிந்து விட்டன. இந்த உலகத்தில் நான் இனி எதிர்பார்ப்பது ஒன்றுமில்லை; யாருக்கும் அஞ்சவேண்டியதுமில்லை. நான் ஓர் ஏழை; துரதிருஷ்டக்காரன்; எங்கோ பாதாளத்தில் அழுந்திக் கிடக்கிறேன். ஆனால் கடவுளைப்போல் ஆசாபாசங்களற்ற வனாய் இருக்கிறேன்.... நான் தனியனாய், நோயாளியாய் என் படுக்கையில் படுத்துக்கிடக்கிறேன். ஒருநாள் நான் பட்டினி யாலோ, குளிரினாலோ, வறுமையினாலோ இறந்துபோய்விடக் கூடும். யாருக்கும் இதனால் தொந்திரவு இராது. ஆனால் இதைப்பற்றி நானே கவலைப்படாதிருக்கும்போது மற்றவர் களுக்கு என்ன கவலை இருக்கப் போகிறது? இந்த வயதிலே நான் சாவையும் வாழ்வையும், நோயையும் ஆரோக்கியத்தை யும், புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் சரிசமமாகவே பார்க்கிறேன்"

இந்தப் பாரிஸ் வாசத்தின்போது தனது சுயசரிதத்தின் கடைசிப் பாகத்தையும் எழுதி முடித்தார் ரூசோ. ஏற்கெனவே மோட்டியர்ஸில் வசித்துக்கொண்டிருக்கையில் மேற்படி, சுயசரிதத்தை எழுதத், தொடங்கியிருந்தார். மோட்டியர்ஸ் வாசிகள் தன் விஷயத்தில காட்டிவந்த விரோத மனப்

பான்மைக்கு மத்தியிலேயே, மன ஆறுதலுக்காக இந்தச் சுய சரிதத்தை எழுதத் தொடங்கினார் என்பது இங்கு குறிப்பிடத் தக்கது.

ரூசோ சுயதிருப்திக்காக நூல்கள் எழுதிவந்ததோடு, தன் ஜீவனத்துக்காகப் பாடல்களை நகல் செய்து கொடுத்து வந்தார். இதன் மூலமாகவும், ஏற்கெனவே வெளியாகியிருந்த நூல்களி லிருந்தும், ஒரு சிறு தொகை எப்போதும் கிடைத்துக் கொண் டிருந்தது. இந்த வருமானத்தைக் கொண்டு திருப்திகரமான வாழ்க்கையை நடத்திவந்தார். "நான் எப்பொழுதும் பணக் காரனாயிருந்ததில்லை; ஆனால் எனக்கு எப்பொழுதும் சௌகரியத்திற்குக் குறைவில்லை" என்று கூறுகிறார்.

இந்தக்காலத்தில் இவருடன் கூடவே இருந்து பலவகை யிலும் உதவிபுரிந்தவர்களில் முக்கியமானவர் பெர்னார்டின் டி செயிண்ட் பீர்ரே* என்பவர். இருவரும் மனங்கலந்து பழகினார் கள். ஒன்றாக உண்பார்கள். ஒன்றாக உலவப் போவார்கள். அநேக விஷயங்களைக் குறித்து அருமையான சம்பாஷணை கள் நடத்தி இன்பம் நுகர்வார்கள். இப்படி அந்நியோந்நியமாக இருவரும் சுமார் ஆறு வருட காலம் பழகிக்கொண்டிருந்தார்கள். ஆனால் திடீரென்று ஒருநாள் – 1778 ஆம் ஆண்டு மே மாதக் கடைசியில் இந்த நட்பு முறிந்துபோய்விட்டது. என்ன காரணம் என்பது விளங்கவில்லை.

பதினெட்டாவது நூற்றாண்டின் கடைசி பாகத்தில், போலந்து நாட்டைச் சின்னாபின்னப்படுத்திப் பங்குபோட்டுக் கொள்ளும் முயற்சியில், ருஷ்யா, ப்ருஷ்யா, ஆஸ்திரியா முதலிய நாடுகள் முனைந்திருந்தன போலந்து மக்களோ, தங்களுடைய

* **Bernardin de Saint Pierre**

சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு மகத்தான தியாகங்களைச் செய்து வந்தார்கள். இந்தக் காலத்தில், வீல்கோர்ஸ்கி* என்ற ஒரு போலந்து நாட்டுக்காரர் பாரிஸுக்கு வந்து ரூசோவை அணுகி, துரதிருஷ்டமுள்ள தன் நாட்டுக்கு, அதனை அந்நியர்கள் பங்குபோட்டுக் கொள்ள முடியாத வகையில், ஓர் அரசியல் திட்டம் வகுத்துத் தருமாறு கேட்டார். போலந்து மக்கள், ரூசோவின் சமுதாய ஒப்பந்தம், எமிலி முதலிய நூல்களைப் படித்து, இவருடைய அரசியல் அறிவிலே அபார நம்பிக்கை வைத்திருந்தார்கள். இந்த நம்பிக்கைக்கு அறிகுறியாகவே வீல்கோர்ஸ்கி ரூசோவிடம் வந்து ஓர் அரசியல் திட்டம் வகுத்துத் தருமாறு கேட்டார். அரசியலைப் பற்றி எழுதிவிட்டு தான் பட்டபாடு ரூசோவுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. ஆயினும் வீல்கோர்ஸ்கியின் வேண்டுகோளை மறுக்க முடியவில்லை. எனவே, 1771 - ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்திலிருந்து 1772 - ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் வரை சுமார் ஆறுமாத காலம், போலந்தைப் பற்றிப் பரிபூர்ணமாக ஆராய்ச்சி செய்து ஓர் அரசியல் திட்டம் வகுத்துக் கொடுத்தார். இதற்காக எவ்வித சன்மானத்தையும் ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார். வீல்கோர்ஸ்கி, இவருக்கு ஒரு தொகையைக் கொடுக்கவேண்டு மென்று எத்தனையோ வகைகளில் முயன்று பார்த்தார். முடியவில்லை. அந்த அரசியல் திட்டத்தின் ஆரம்ப வாசகங் களில் சில வருமாறு:

*"போலந்து மக்கள்தான், தங்கள் நாட்டுக்கேற்ற ஒரு நல்ல அரசியல் திட்டத்தை வகுக்க முடியும்.... ஐரோப்பாவிலுள்ள மற்ற நாடுகள் யாவும் அழிவை நோக்கி ஓடிக்கொண்டிருக்கை யில் போலந்து மட்டும் அழிக்கப்பட்டும் ஒடுக்கப்பட்டும்*

* **Count Wielkorski**

*வருகையில்கூட, எப்படி இளமையோடு, உற்சாகத்தோடு இருக்கிறதென்பது தெரியவில்லை. போலந்து மக்கள் சுதந்திரத்தைக் காதலிக்கிறார்கள். இதனால் சுதந்திரத்திற்கு அவர்கள் தகுதியானவர்கள்"*

ரூசோ போலந்துக்கு அரசியல் சட்ட திட்டத்தைத் தயாரித்துக் கொடுத்த அடுத்த மாதத்திலேயே, போலந்து, அதன் சுற்றுப்புறமிருந்த வல்லரசுகளினால் பங்குபோட்டுக் கொள்ளப் பட்டு விட்டது. இதைக்கூட ரூசோ சட்ட திட்டத்தில் சுட்டிக்காட்டி இருக்கிறார். போலந்துக்கு அடிக்கடி ஏற்பட்டு வரும் தொந்தரவு களுக்கெல்லாம் அடிப்படையான காரணம் அதனுடைய விஸ்தீரணந்தான் என்பது இவருடைய நம்பிக்கை. "போலந்து வாசிகளே! உங்கள் நாட்டின் எல்லைகளைக் குறைத்துக் கொள்ளுங்கள்.... ஒருக்கால், உங்களைச் சுற்றியுள்ள நாட்டார், உங்களுக்காக இந்தச் சேவையைச் செய்ய நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் போலும்" என்று கூறியிருக்கிறார்.

ரூசோவுக்கு வரவர பாரிஸ் வாசத்திலே ஒரு வெறுப்பு உண்டாகி விட்டது. ஏற்கெனவே இவருக்கு நகரவாழ்க்கை பிடிக்காது. எனவே பாரிஸுக்கு முப்பது மைல் தூரத்திலுள்ள எர்மெனான்வில்லே[1] என்ற ஒரு சிற்றூருக்கு, கிரார்டின்[2] என்ற ஒரு பிரபுவின் அழைப்புக் கிணங்கச் சென்று அங்கே வசிக்கத் தீர்மானித்தார்.

பாரிஸை விட்டு வேறெங்கேனும் சென்று வசிப்பதைப்பற்றி ரூசோ யோசித்துக் கொண்டிருக்கிறாரென்பதை அறிந்த சிலர், இவரைத் தங்கள் தங்கள் விருந்தாளியாக வரவேற்று, உபசரிக்கத் தயாராயிருப்பதாகத் தெரிவித்தார்கள். இப்படி தெரிவித்தவர்கள்

---
**1. Ermenonville** **2. M. de Girardin**

அரசவம்சத்தைச் சேர்ந்தவர்கள்; பிரபுக்கள்; பொதுவாக இவரிடம் விசேஷ மதிப்பு வைத்தவர்கள். உதாரணத்திற்காக இவருக்கு வந்த அழைப்புக் கடிதம் ஒன்றை இங்கு தருகிறோம். அழைப்பு அனுப்பியவர் அரச வம்சத்தைச் சேர்ந்த ப்ரின்ஸ் டி லிக்னே* என்பவர். ரூசோவினிடம் எவ்வளவு மதிப்பு வைத்து எழுதுகிறார் பாருங்கள்.

*"ஐயா*

*அன்றொரு நாள் நான் உங்களைக் காண வந்தேன். உங்களை மறுபடியும் காணவேண்டுமென்ற ஆவல் எனக்கு இருந்த போதிலும் உங்களைத் தொந்தரவு படுத்த எனக்கு விருப்பமில்லை. ஏனென்றால் உங்களைப் பலரும் அடிக்கடி வந்து பார்த்துத் தொந்தரவு கொடுப்பதை நீங்கள் விரும்ப வில்லை என்பது எனக்குத் தெரியும்.*

*என்னுடைய ஏற்பாடு (அதாவது என்னுடைய விருந்தாளியாக வந்திருக்க வேண்டுமென்ற ஏற்பாட்டை) பற்றி யோசித்துப் பாருங்கள். என்னுடைய நாட்டில் ஜனங்களுக்கு வாசிக்கத் தெரியாது. இதனால் உங்களைப் போற்றுவோரும் இருக்க மாட்டார்கள். உங்களைத் துன்புறுத்துவோரும் இருக்க மாட்டார்கள்.*

*என்னுடைய புஸ்தகங்கள், தோட்டம் முதலிய அனைத்தையும் உங்களிடம் ஒப்புவித்துவிடுகிறேன். உங்களுக்கு விருப்பமிருந்தால் உங்களை வந்து அவ்வப்பொழுது பார்க்கிறேன். இல்லா விட்டால் பாராமலே இருக்கிறேன். என்னுடைய இருப்பிடத்திற்குச் சிறிது*

---

* **Prince de Ligne**

*தொலைவில், உங்களுக்கென்று தனியாக ஒரு வீடு அமைத்துக் கொடுக்கிறேன். அங்கே நீங்கள் பயிரிடலாம்; விதைக்கலாம்; என்ன வேண்டுமானாலும் செய்யலாம்.*

*உங்களைப் போலவே எனக்கும் சிங்காதனங்கள், ஆதிக்கங்கள் முதலியன பிடிக்காது. நீங்கள் யார் மீதும் ஆதிக்கம் செலுத்தவேண்டாம்; உங்கள் மீதும் யாரும் ஆதிக்கம் செலுத்தமாட்டார்கள். என் வேண்டுகோளுக்கு நீங்கள் இசைந்தால், நான் நேரில் வந்து உங்களை அழைத்து வருகிறேன். நீங்கள் வசிப்பதற்கென்று பிரத்தியேகப் படுத்தப்பட்டிருக்கும் வீட்டிற்கு 'சீல மந்திரம்' என்று பெயர் கொடுப்பேன். ஆனால் இந்தப் பெயரை பகிரங்கப் படுத்தமாட்டேன். ஏனென்றால் உங்களுடைய அடக்கத்திற்கு நான் மதிப்புக் கொடுக்கிறவன்.*

*இந்த என்னுடைய ஏற்பாடு உங்களுக்குப் பிடிக்க வில்லையென்றால் இதைப்பற்றி நான் எங்கும் சொல்லாமலே இருந்துவிடுகிறேன். ஆனால் உங்களுக்குச் சொல்லாமலே உங்களுடைய நூல்களைப் படித்து வருவேன்; உங்களைப் போற்றியும் வருவேன்;*

1778 - ஆம் ஆண்டு மே மாதம் ரூசோ, தெரேஸே சகிதம் எர்மெனான்வில்லேயில் வந்து குடியேறினார். சுமார் இரண்டு மாதகாலமே இங்கு வசித்துக்கொண்டிருந்தார்; ஆம்; உயிர் வைத்துக் கொண்டிருந்தார். நோய், மூப்பு, கவலை, மருட்சி முதலியன வெகு வேகமாக இந்தக் காலத்தில் வந்து இவரை மூடிக்கொண்டன.

ஜூலை மாதம் 2 ஆம் தேதி வழக்கம்போல் ரூசோ காலை ஐந்து மணிக்கு எழுந்து சிறிது தூரம் உலாவச் சென்றார். இயற்கை அன்னையைக் கடைசி முறையாகத் தரிசித்துக் கொண்டார். ஏழு மணிக்குத் திரும்பி வந்து காபி குடித்தார். அவ்வளவுதான், தலை சுற்றியது. கீழே விழுந்தார். மூச்சு நின்றுவிட்டது. அப்பொழுது ரூசோவுக்கு வயது அறுபத்தாறு.



# 9. ஒழுங்கு நிறைந்தவர்

ரூசோ இறந்து விட்டார். இந்தச் செய்தி பிரான்சின் பல பாகங்களுக்கும் உடனே பரவியது. திரள்திரளாக ஜனங்கள் வந்து அவருக்கு அஞ்சலி செலுத்திவிட்டுப் போனார்கள். சிற்ப நிபுணர்கள் பலர் வந்து அவருடைய உருவத்தை வரைந்து கொண்டார்கள். "ஒரு பொருளின் மதிப்பு, அது இல்லாத போதுதான் தெரிகிறது" என்பது சத்திய வாசகமல்லவா?

ரூசோ, தான் இறந்த பிறகு எந்த இடத்தில் புதைக்கப்பட வேண்டுமென்று விரும்பினாரோ அந்த இடத்திலேயே எர்னெமெனான்வில்லேயிலுள்ள தோட்டத்திலேயே - புதைக்கப் பட்டார். ஆனால் பதினாறு வருடம் கழித்து - 1794ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 11 ஆம் தேதி பிரெஞ்சுப் புரட்சி உத்வேகத்துடன் ஜ்வாலை விட்டு எரிந்து கொண்டிருந்த போது ரூசோவின் உடல் மீண்டும் தோண்டியெடுக்கப்பட்டு மிகுந்த ஆடம்பரத்துடன் பாரிஸ் மாநகருக்குக் கொண்டு வரப்பட்டு. 'பெரிய மனிதர்கள்' புதைக்கப்படுகிற இடத்திலே புதைக்கப் பட்டது. அந்தப் பிரேத ஊர்வலத்திற்கு முன்னால், எந்தச் 'சமுதாய ஒப்பந்தம்' பாரிஸ் மாநகரில் எரிக்கப் பட்டதோ அதே

'சமுதாய ஒப்பந்தம்' மிகப்பெரிய மரியாதையாக்குரிய தாக்கப்பட்டது. பிரெஞ்சுப் புரட்சியின் போதுதான் ரூசோவின் எழுத்துக்களை ஜனங்கள் உணர்ந்தார்கள்; அவரிடம் மதிப்புக் காட்ட ஆரம்பித்தார்கள்.

ஆனால் அவருடைய எதிரிகள் எல்லோரும் படித்த அறிஞர்கள்தான்; அவர் இறந்த பிறகு கூட அவரை விடவில்லை. அவருடைய பெயர், எதிர் காலத்தில் எங்கே ஒலிந்துக் கொண்டிருக்கப் போகிறதோ என்று அஞ்சி அவரைப் பற்றியும் அவர் இறந்துபோன விதத்தைப்பற்றியும் இல்லாத பொல்லாத கதைகளை எல்லாம் கட்டிவிட்டார்கள். ரூசோவுக்கு அடிக்கடி சித்தப்பிரமை ஏற்படுவதுண்டென்றும், இப்படிப் பட்டதொரு தருணத்தில் அவர் தற்கொலை செய்துகொண்டு விட்டாரென்றும் வதந்திகளைக் கிளப்பி விட்டார்கள். இந்த வதந்திகளை ஊர்ஜிதம் செய்ய அநேக நூல்கள் தோன்றின! ரூசோவின் எழுத்துக்களிலிருந்தே இந்த வதந்திகளுக்கு ஆதாரம் எடுத்துக் காட்டத் தொடங்கினார்கள் சில அறிஞர்கள்! ஐயோ! அறிவானது எவ்வாறு துஷ்பிரயோகப் படுத்தப்படுகிறது! பிரெஞ்சு அரசாங்கத்தார், இந்த வதந்திகளுக்கெல்லாம் ஒரு மூடிபோட்டு மூடிவிட வேண்டுமென்று தீர்மானித்து 1897-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 18-ஆம் தேதி - இறந்த சுமார் நூற்றிருபது வருடங்களுக்குப் பிறகு ரூசோவின் உடலை சவக் குழியிலிருந்து எடுத்துப் பரிசோதனை செய்து பார்த்தனர். அவர் தற்கொலை செய்து கொண்டதற்கு அடையாளம் ஒன்றும் காணப்படவில்லை!

ரூசோவிடம் ஆதியில் யாரார் நெருங்கிப் பழகினார் களோ அவர்களே அவருடைய பிற்காலத்தில் பரம எதிரிகளாகி விட்டார்கள். டிடெராட் என்ன, டி' எபினே சீமாட்டி என்ன,

டேவிட் ஹ்யூம் என்ன? இவர்களெல்லோரும் சேர்ந்து, ரூசோவைப்பற்றிப் பொது ஜனங்கள் தப்பபிப்பிராயம் கொள்ளுமாறு அவதூறான செய்திகள் பலவற்றைப் பரவச் செய்தனர். இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் ரூசோவின் சுதந்திர மனப்பான்மைதான். மற்றவர்களுடைய தயவிலே வாழ்வதென்பதை அவர் அறவே வெறுத்து வந்தார். அவரிடத்தில் அரசர்கள் அன்பு செலுத்தினார்கள்; பிரபுக்கள் பெருமதிப்புக் காட்டினார்கள்; பணக்காரச் சீமாட்டிகள் அவர் சொன்ன வேலையைச் செய்யக் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர் இஷ்டப்பட்டிருந்தால் மாளிகைகளிலே வசித்திருக்கலாம்; அரசபோகங்களை அனுபவித்திருக்கலாம். ஆனால் அவர் இவைகளை எல்லாம் துச்சமாகக் கருதினார். ஒரே ஒரு உதாரணத்தை மட்டும் இங்கு எடுத்துக்காட்ட விரும்புகிறோம்.

ரூசோ பாரிசில் வசித்துக்கொண்டிருந்த காலத்தில் - அதாவது 1752-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் - அவர் எழுதிய இசைநாடகமொன்று பிரெஞ்சு சக்ரவர்த்தி தம்பதிகளின் முன்னிலையில் நடித்துக் காட்டப்பட்டது. எல்லோரும் அதனைப் புகழ்ந்து பேசினார்கள். அரச தம்பதிகளும் பாராட்டினார்கள். தங்களுடைய பாராட்டுதலுக்கு அறிகுறியாக ரூசோவுக்கு ஒரு தொகையைச் சன்மானமாக அளிக்க வேண்டுமென்று கருதி அவரை மறுநாள் அரண்மனைக்கு வந்து போகும்படி சொல்லியனுப்பினார்கள். ரூசோ போக மறுத்து விட்டார். 'போனால் அரச தம்பதிகளைப் புகழ வேண்டியிருக்கும்; அநாவசியமாக ஒருவரைப் புகழ்ந்து பேசுவது அவருடைய சுபாவத்திற்கு விரோதம். தவிர, அவர்கள் ஏதேனும் சன்மானம் கொடுத்தால் அதை மறுக்க முடியாது. பெற்றுக்கொண்டாலோ தன்னுடைய சுதந்திரம் போய்விடும்.'

